# இருமாப்புள்ள இளவரசி

[அயர்லாந்து நாட்டுக் கதைகள்]

ப. ராமஸ்வாமி



பழனியப்பா பிரதர்ஸ்

*கோனார் மாளிகை*

25, (ப.எ. 14) பீட்டர்ஸ் சாலை, சென்னை - 600 014.

*கிளைகள் :*

திருச்சி - 620 002 சேலம் - 636 001

கோயமுத்தூர் - 641 001 மதுரை - 625 001

ஈரோடு - 638 001

# பதிப்புரை

குழந்தைகளே !

மகாகவி பாரதியாரை நீங்கள் அறிவீர்கள் ! அவர் இயற்றிய "ஓடி விளையாடு பாப்பா !" என்னும் பாட்டைப் பாடாத தமிழ்க் குழந்தை உண்டா?

பாரதியார் இன்னும் ஒரு பாட்டுப் பாடி இருக்கிறார். அதில்,

" சென்றிடுவீர் எட்டுத் திக்கும் – கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர் !"

என்றார்.

இதன் பொருள் என்ன?

தமிழைத் தவிர இன்னும் பல மொழிகள் இருக்கின்றன. அம்மொழிகளில் பல நல்ல கதைகள், கட்டுரைகள், கவிதைகள் முதலியன இருக்கின்றன.

அவற்றைத் தமிழ் மக்கள் எப்படிப் படிக்க இயலும்? அவற்றைத் தமிழில் மொழி பெயர்த்து எழுதினால் தமிழ் மக்கள் எல்லாரும் படிப்பர்; பயன் பெறுவர். இதைத்தான் மகாகவி பாரதியார் மேலே சொன்ன பாட்டால் சொல்லியிருக்கிறார்.

பாரதியார் விரும்பிய செயலைத்தான் இப்பொழுது நாங்கள் செய்திருக்கிறோம்.

அயர்லாந்து என்பது ஒரு நாடு. அந்நாட்டுச் சிறுவர்களுக்காகப் பல சிறுகதைகள் உள்ளன. அவற்றை நீங்களும் படித்து மகிழ வேண்டாவா?

திரு. ப. ராமஸ்வாமி என்பவர் சிறந்த எழுத்தாளர். அவர், அயர்லாந்து நாட்டு ஏழு சிறுகதைகளைச் சேர்த்து 'இறுமாப்புள்ள இளவரசி' என்னும் பெயரில் இந்நூலைத் தமிழில் ஆக்கித் தந்திருக்கிறார்.

இந்த ஆண்டு (1979) "சர்வதேசக் குழந்தைகள் ஆண்டு !" இச்சமயத்தில், அயர்லாந்து நாட்டுச் சிறுகதைகள் தமிழில் வெளிவருவது மிகப் பொருத்தமானது அல்லவா?

வானவில்லை அழகு செய்யும் ஏழு வண்ணங்களைப் போல, இனிக்கும் ஏழு செங்கரும்புச் சிறுகதைகள் இந்நூலில் உள்ளன. படித்துச் சுவையுங்கள்; மற்ற குழந்தைகளையும் படித்து மகிழச் சொல்லுங்கள்!

பழனியப்பா பிரதர்ஸ்

# உள்ளே......



— — —

# 1. இறுமாப்புள்ள இளவரசி

நல்லவராகிய ஓர் அரசருக்கு, ஒரு காலத்தில், வடிவழகியாகிய ஒரு பெண் இருந்தாள். அவளுடைய எழிலைப்பற்றி உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் கேள்விப்படாதவரே இல்லையெனலாம். ஆனால், அவள் எந்த மன்னனையும் இளவரசனையும் மணந்துகொள்ள மறுத்து வந்தாள். கடைசியாக, அரசர், ஒரு நாள், தமக்குத் தெரிந்தும் தெரியாமலும் இருந்த அரசர்கள், இளவரசர்கள், பிரபுக்கள், சீமான்கள் பலரையும் தமது சபைக்கு வரும்படி ஏற்பாடு செய்து, இளவரசி அவர்கள் அனைவரையும் பார்த்துத் தனக்குகந்தவரைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள விரும்பினார். விருந்தினர் அனைவரும் காலை உணவுண்ட பின்னர், அரண்மனையை ஒட்டியிருந்த புற்றரையில் வரிசை வரிசையாக நின்றனர். இளவரசி அவர்களுக்கு முன்னால் நடந்து சென்றாள். ஒவ்வொருவரையும் அவள் பார்த்துப் பார்த்துக் கழித்துக்கொண்டே வந்தாள். ஒருவர் தடித்திருந்தார் : "இவர் பீப்பாய், வேண்டா !" என்றாள், இளவரசி. மற்றொருவர் மெல்லிய உடலுடன் நெட்டையா யிருந்தார் : "இவர் நெட்டைக் கொக்கு, தேவையில்லை !" என்றாள். வெள்ளை முகத்துடன் இருந்த ஒருவரைக் கவனித்து, "செத்தவன் முகம் போல் வெளிறியிருக்கிறது இவர் முகம் !" என்றாள். சிவந்த கன்னங்களுடன் விளங்கிய ஒருவரை, "இவர் சேவற்கொண்டை !" என்று அவள் ஏளனம் செய்தாள். இவ்வாறு பலரையும் பழித்து ஒதுக்கிக் கொண்டே சென்றாள். இறுதியில் அவள் ஓர் இளைஞனைக் கண்டு சற்றே நின்றாள். அவன் நல்ல உடலமைப்பும் அழகும் பெற்றிருந்தான். அவனிடம் என்ன குறை காணலாமென்று இளவரசி யோசித்துக்கொண் டிருந்தாள். அவன் நேர்த்தியான மீசையும் சிறு தாடியும் வைத்திருந்ததைக் கண்டு அவள், "தாடிக்காரர் எனக்கு வேண்டா !" என்றாள்.

ஆகவே, வந்திருந்தவர் அனைவரும் திரும்பிச் சென்று விட்டனர். அரசருக்கு வருத்தம் தாங்க முடியவில்லை. அவர்

மகளை அழைத்து, "நாளைக் காலையில், முதலில் எந்தப் பிச்சைக்காரன் அல்லது இராப்பாடி அரண்மனைப்பக்கம் வந்தாலும், அவனுக்கே உன்னைத் திருமணம் செய்து வைக்கப் போகிறேன்!" என்று அறிவித்தார்.

மறுநாள் சூரியன் உதிக்குமுன்பே, வாயிலில் இசைக் குரல் கேட்டது. உடல் முழுதும் கந்தல் துணிகள், பிடரிவரை படர்ந்து தொங்கிக்கொண்டிருந்த தலைமயிர், முகமனைத்தும் சிவப்புத் தாடியும் மீசையும் கொண்டு காட்சியளித்தான் ஒரு பிச்சைக்காரன். அரசர் உடனே அரண்மனைக் கதவுகளைத் திறக்கும்படி உத்தரவிட்டார். பிச்சைக்காரன் உள்ளே முன் மண்டபத்திற்கு அழைத்து வரப்பட்டான். உடனே பாதிரியாரும் வரவழைக்கப்பட்டார். இளவரசிக்கும் தாடிக்காரனுக்கும் திருமணம் நடந்தேறியது. அவள் கூவினாள், கதறினாள், உறுமிப் பார்த்தாள், ஒன்றும் பலிக்கவில்லை. அரசர் அவளைப் பொருட்படுத்தவே இல்லை. அவர் மணமகனைப் பார்த்து, "இந்தா, இதோ ஐந்து பவுன்கள் இருக்கின்றன. இவைகளை வாங்கிக் கொண்டு, உன் மனைவி என் கண்முன் நில்லாதபடி உடனே அழைத்துப் போ! இனி மறுபடி நீயோ அவளோ என் கண்ணிலே படக்கூடாது!" என்று வாழ்த்தியனுப்பிவிட்டார்.

பிச்சைக்காரன் தன் நாயகியை அழைத்துக்கொண்டு வெளியே நடந்து சென்றான். அவளுடைய துயரமோ சொல்லுந்தரமன்று. ஆனால், அவள் கணவனுடைய பேச்சிலும் செயலிலும் அன்பும் மரியாதையும் காணப் பட்டன. அவர்கள் ஒரு வனத்தின் வழியாகச் செல்லுகையில், "இது யாருடைய வனம்?" என்று அவள் கேட்டாள். "நேற்றுத் தாடிக்காரர் என்று நீ பெயர் வைத்து அழைத்தாயே அந்த அரசருடையது!" என்றான் பிச்சைக் காரன். பல புற்றரைகள், கழனிகள் முதலியவைகளைப்பற்றி அவள் வினவிய பொழுது. "எல்லாம் அதே மன்னனுடை யவை; அருகிலே அதோ தெரியும் பெரிய நகரும் அவருடையது!" என்று பதில் வந்தது. 'ஆகா, என்ன முட்டாள்தனம் செய்துவிட்டேன் நான்! அவர் அழகானவராயும் இருந்தார்! அவரையே கணவராக வரித்தேனில்லையே!' என்று அவள் தனக்குள்ளே மெல்லச் சொல்லிக்கொண்டாள். கடைசியாக, அவர்கள் ஒரு

குடிசையின் பக்கம் வந்து சேர்ந்தனர். "என்னை ஏன் இங்கே அழைத்துக்கொண்டு வருகிறாய்?" என்று இளவரசி கேட்டாள். "இதுவரை இது என் வீடாக இருந்தது, இனி இது உன் வீடு!" என்று கணவன் கூறினான். அவள் அழத் தொடங்கினாள். ஆனால், களைப்பும் பசியும் அதிகமா யிருந்தமையால், அவள் அவனுடன் உள்ளே சென்றாள்.

அந்தோ! அந்தக் குடிசையில் உணவருந்த மேசை எடுத்துப் போடுவாரில்லை; குளிர் காயும் கணப்பை மூட்டுவாரில்லை. எல்லா வேலைகளையும் இளவரசியே செய்ய வேண்டியிருந்தது. கணப்பு மூட்டவும் உணவு சமைக்கவும் வீட்டைச் சுத்தம் செய்யவும் - எல்லாம் அவளுடைய பொறுப்புகளாயின. மறு நாள் அவள் கணவன் பஞ்சு நூலில் செய்திருந்த முரட்டுத் துணிகளை அவளுக்கு ஆடைகளாகக் கொடுத்தான். தலையில் கூந்தலை மறைத்துக் கட்டிக்கொள்ளவும் அவைகளில் ஒரு துண்டை எடுத்தளித்தான். அவள் வீட்டு வேலைகளை முடித்து விட்டுச் சிறிது நேரம் சும்மா அமர்ந்திருக்கையில், அவன் எங்கிருந்தோ பிரம்புக் கொடிகள் அறுத்து வந்து, அவைகளை இருவருமாகக் கிழித்துக் கூடைகள் முடைய வேண்டுமென்று தெரிவித்தான். எந்த வேலையும் செய்தறியாத அவளுடைய மலர் போன்ற கைகள் பிரம்புகளைக் கிழிக்கும் பொழுது அவைகளில் உதிரம் வடிந்தது. பிறகு, அவன் தன் கிழிந்த துணிகளைத் தைத்து வைக்கும்படி கோரினான். ஊசி அவள் கைவிரல்களிலே பல இடங்களில் குத்திவிட்டது. அவனும் அவளிடம் இரக்கம் கொண்டு, அவளை வேறு வேலை செய்யும்படி ஏவினான். ஒரு கூடையில் மண் பாண்டங்களை நிரப்பி, அதைத் தூக்கிக்கொண்டு சந்தையிலே போய் விற்று வரும்படி சொல்லி அவளை அனுப்பினான். அரசர் மகள் இப்படிப் பானை சட்டிகளைத் தூக்கிச் செல்வது அவமானமாய்த் தான் இருந்தது. மாந்தளிர் போன்ற அவள் மேனிக்கும், தலையிலே சும்மாடு கட்டிக் கூடை சுமப்பதற்கும் நேர்மாறாகவே தோன்றிற்று. ஆனால், அவள் இந்த வேலையையும் செய்து தீர வேண்டியிருந்தது.

அதற்கு மறுநாள் அவளை மீண்டும் சட்டி பானைகளுடன் சந்தைக்கு அனுப்பியதில், அங்கே

குடிகாரன் ஒருவன் குழப்பம் செய்ததால், அந்தப் பாண்டங்கள் உடைந்து சிதறிப் போய்விட்டன. ஆகவே, மேற்கொண்டு அவளுக்கு வேறொரு வேலை தேட வேண்டுமென்று பிச்சைக்காரன் யோசித்தான். "சரிதான், என்னுடன் வா! அரண்மனையிலே ஒரு சமையற்காரியை எனக்குத் தெரியும். அவள் மூலம் உனக்கும் ஒரு வேலை வாங்கித் தருகிறேன்!" என்று சொல்லி, அவளை அழைத்துக் கொண்டு சென்றான்.

இளவரசி தன் செருக்கை மீண்டும் அடக்கிக்கொள்ள நேர்ந்தது. அரண்மனைச் சமையலறையில் அவளுக்கு இடைவிடாது வேலை இருந்துகொண்டேயிருந்தது. அங்கு வரும் வேலைக்காரர்கள், வண்டிக்காரர்கள் முதலில் அவளிடம் முறை தவறிப் பேசினார்கள். ஆனால், தலைமைச் சமையற்காரி அவர்களை அதட்டி விரட்டினாள். ஒவ்வொரு நாளும் வேலை முடிந்ததும் இரவில் இளவரசி தன் கணவனுடைய குடிசைக்குத் திரும்பிவிடுவாள். அங்கு செல்லும் பொழுது அவனுக்காகச் சில பண்டங்களைத் தன் சட்டைப்பைகளில் அவள் போட்டுக்கொண்டு செல்வது வழக்கம்.

ஒரு வாரம் கழிந்தது. திடீரென்று அரசனுக்குத் திருமணம் ஏற்பாடாகியிருப்பதாகச் சொல்லப்பட்டது. ஆனால், மணப்பெண் யாரென்பது மட்டும் ஒருவருக்கும் தெரியவில்லை. சமையலறையில் வேலை அதிகமாயிற்று. எண்ணற்ற பண்டங்கள் பணியாரங்களெல்லாம் தயாரிக்கப் பெற்றன. இரவில் வேலைகள் முடிந்த பிறகு சமையற்காரி இளவரசியின் சட்டைப்பைகளில் மிஞ்சியிருந்த பண்டங்களைப் பொட்டலங்களாகக் கட்டித் திணித்து வைத்தாள். பிறகு, "அரண்மனை மண்டபத்திலே அலங்காரங்கள் செய்திருக்கிறார்கள். நாம் அங்கே போய் எட்டிப் பார்த்துவிட்டுப் போவோமே!" என்று அவள் அழைத்தாள். இருவரும் மண்டபத்தின் அருகிலே சென்று பார்த்தனர்.

மண்டபத்திலிருந்து வேகமாக ஓர் ஆண்மகன் வெளியேறி அவர்கள் அண்டையில் வந்து நின்றான். அவனே அரசன்! கம்பீரமான தோற்றம், வீரத்திற்கு அறிகுறியான மீசை, சிறிதளவு தாடி, உயர்ந்த ஆடை ஆபரணங்களுடன், அவன் கண்டோரைக் கவரும்வண்ணம்

நின்றான். அவனே, முன்னால் இளவரசியால் 'தாடிக்காரர்' என்று ஒதுக்கப்பட்ட அரசன்!

அவன் சமையற்காரியைப் பார்த்து, "உனக்கு உதவியாக வந்துள்ள அழகான புது வேலைக்காரி இங்கே எட்டிப் பார்த்த பிழைக்காக என்னுடன் ஒரு முறை நடனமாட வேண்டும்!" என்று சொன்னான். இளவரசி இசைகிறாளோ இல்லையோ என்றுகூடப் பாராமல், அவன் அவள் கரங்களைப் பற்றி இழுத்துக்கொண்டு சென்று மண்டபத்தில் நடனமாடத் தொடங்கினான். வாத்தியக் காரர்கள் வாத்தியங்களை வாசிக்க நடனம் பிரமாதமாக நடந்தது. ஆரம்பத்திலேயே இளவரசியின் சட்டைப்பைகளி லிருந்த பொட்டலங்கள் ஒவ்வொன்றாக வெளியே வந்து விழுந்தன. அவைகளைப் பார்த்து அங்கே கூடியிருந்தவர்கள் அனைவரும் நகைத்தார்கள். அப்பொழுது அரசன் அவளை இழுத்துக்கொண்டு மண்டபத்தின் வெளிப்புறத்தில் ஒரு தனியிடத்தை நாடினான். அங்கே சென்றதும், "என் அன்பே! என்னைத் தெரியவில்லையா உனக்கு? நான்தான் தாடிக்கார அரசன், நான்தான் உன்னை மணந்துகொண்ட பிச்சைக் காரன், நானேதான் சந்தையில் உன் பாண்டங்களை உடைத்த குடிகாரன்! நான் யாரென்று தெரிந்துதான் உன் தந்தை உன்னை எனக்களித்தார். இவையெல்லாம் உன் இறுமாப்பை ஒழிப்பதற்காக நடந்தன!" என்று அவன் தெரிவித்தான். அந்த நேரத்தில் பலவிதமான உணர்ச்சிகள் அவளை ஆட்டிவைத்தன. பயத்தினால் நடுக்கம் ஒரு பக்கம், அவமானம் ஒரு பக்கம், மற்றொரு புறத்திலே ஆனந்தம்! ஆயினும், எல்லாவற்றினும் காதலே மேலோங்கி நின்றதால், அவள் அவன் மார்பிலே தலையைச் சாய்த்துக்கொண்டு ஒரு குழந்தையைப் போல் அழுதாள். உடனே அரண்மனைப் பணிப்பெண்கள் ஓடி வந்து, அவளை அழைத்துச் சென்று பட்டாடைகள் அணிவித்து, நவரத்தினங்களிழைத்த பூண்களையெல்லாம் புனையச்செய்து, மீண்டும் அழைத்துக் கொண்டு வந்தனர். அந்த நேரத்தில் அவளுடைய தந்தையாகிய அரசரும், அவருடைய இராணியும் அங்கே வந்து சேர்ந்தனர். மேளதாளங்களுடன் இளவரசிக்கும் இளைஞனான தாடி அரசனுக்கும் முறைப்படி விவாகம் நடந்தேறியது. எல்லோரும் இன்பவெள்ளத்தில் ஆழ்ந் திருந்தனர். அத்தகைய கோலாகலமான திருமணத்தை நாம் இனி எங்கே பார்க்கப்போகிறோம்!

## 2. எசமானனும் வேலைக்காரனும்

ஒரு காலத்தில் **தானியேல்** என்று ஒரு வாலிபன் இருந்தான். அவனுடைய முழுப்பெயர் **பில்லி மாக் தானியேல்.** அவன் குடிப்பதைத் தவிர வேறு வேலை எதுவும் செய்வதில்லை; மது வாங்கப் பணம் இருக்க வேண்டும். அவனுக்கு வேறு கவலையே கிடையாது. குடித்த பிறகு எவர்களுடனாவது கூடி வம்பளப்பது அவன் வழக்கம். குடி வெறியிலிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, எவரையும் ஏசுவதும் பட்டென்று அடிப்பதும் அவன் கையாண்டு வந்த முறைகள். இந்த முறைகளால் அவன் எந்தச் சண்டையிலும் ஈடுபடுவான், எந்தச் சண்டையிலிருந்தும் வெளிவந்தும் விடுவான். தீய ஒழுக்கமுள்ள சிலர் அவனுக்குக் கூட்டாளி களாக இருந்து வந்தனர்.

ஒரு நாள், இரவில் பனி பெய்து குளிர் அதிகமா யிருக்கையில், அவன் எங்கிருந்தோ வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான். வானில் வெண்மதி தண்ணொளி பரப்பிக்கொண்டிருந்தது. அவன் நிலவைப்பற்றி எண்ண வில்லை. 'இந்த நடுங்கும் குளிரில் உயர்ந்த சாராயமிருந்தால் ஆனந்தமாகக் குடிக்கலாமே! குடித்தால் இந்தக் குளிரெல்லாம் பறந்துவிடுமே!' என்று அவன் தனக்குள்ளே சொல்லிக்கொண்டான்.

"நீ இரண்டாம் தடவை நினைப்பதற்குள் இதோ கொண்டுவந்திருக்கிறேன், தானியேல்!" என்று சொல்லிக் கொண்டே, குள்ளமான ஒரு மனிதன் ஒரு கண்ணாடிக் கிண்ணத்தில் மதுவை அவனிடம் கொடுத்தான். அவன் ஏதோ பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவனைப் போலக் காணப்பட்டான். அவனுடைய உடைகளில் தங்கச்சரிகை வைத்துத் தைக்கப்பட்டிருந்தது. அவன் அளித்த மது முதல் தரமானது, எவரும் கண்டிராதது, எவரும் பருகியிராதது.

அவன் பெரிய இடத்துச் சீமானாகத் தோன்றிய போதிலும், தானியேல் வழக்கம் போல, "அன்புக் குள்ளனே,

வெற்றி! உனக்கு நன்றி! காசு யார் கொடுத்தாலென்ன, இதோ, உன் நன்மைக்காக நான் குடிக்கிறேன்!" என்று கூறினான். உடனே, கிண்ணத்திலிருந்த மது அனைத்தையும், மூச்சுக்கூட விடாமல், அவன் உறிஞ்சிக் குடித்துவிட்டான்.

குள்ளன், "வெற்றி! தானியேல், உனக்கு நல்வரவு! ஆனால், நீ மற்றவர்களை ஏமாற்றுவது போல் என்னிடம் வைத்துக்கொள்ளாதே! காசைக் கீழே வைத்துவிட வேண்டும்! ஒரு கனவானைப் போல நீ முறையாக நடந்து கொள்வாயென்று நம்புகிறேன்!" என்று கூறினான்.

"நானா உனக்குப் பணம் கொடுக்க வேண்டும்? உன்னையே தூக்கி என் சட்டைப்பையில் போட்டுக் கொண்டு போய்விடுவேன், எச்சரிக்கை!" என்றான், தானியேல்.

"தானியேல்! ஏழு வருடமும் ஒருநாளும் நீ என் வேலைக்காரனாயிருந்தால், நீ தர வேண்டிய பணத்தைக் கழித்துக்கொள்வேன். ஆகையால், பேசாமல் என்னுடன் வா!" என்று குள்ளன் கோபமாகப் பேசினான்.

இதைக் கேட்ட தானியேலுக்கு வருத்தம் அதிகமாயிற்று. 'இந்தக் குள்ளனிடம் நான் ஏன் கடுமையாகப் பேசினேன்!' என்று அவன் தன்னைத்தானே நொந்து கொண்டான். எக்காரணத்தினாலோ குள்ளனுடன் செல்ல வேண்டியதுதான் என்று அவனுக்குத் தோன்றிற்று. அவனைத் தொடர்ந்து சென்றான். நடக்க நடக்க வழி தொலையவில்லை. இரவு முழுதும், மேடும் பள்ளமும், கோடும் குளமும், கரையும் கழனியுமாக அவர்கள் பல இடங்களைத் தாண்டிச் சென்றனர். இடையில் ஓய்வென்பதே இல்லை.

பொழுது புலரத் தொடங்கியதும், குள்ளன் பின்னால் திரும்பி, "தானியேல், இப்பொழுது நீ வீட்டுக்குப் போகலாம். ஆனால், இன்றிரவு நீ கோட்டை மைதானத்தில் என்னை வந்து சந்திக்க வேண்டும். தவறினால் என்ன நடக்குமென்பதை நாளடைவில் நீயே தெரிந்துகொள்வாய். ஆனால், நீ நல்ல முறையில் என்னிடம் பணி செய்து வந்தால், நான் உனக்குத் தாராளமாக உதவிகள் செய்வேன்!" என்று கூறினான்.

தானியேல் வீடு வந்து சேர்ந்தான். அவன் களைத்துச் சோர்வுற்றிருந்த போதிலும், குள்ளனைப்பற்றிய நினைவு அகலாமலே இருந்ததால் அவனுக்குத் தூக்கமே வரவில்லை. ஆயினும், குள்ளனுடைய கட்டளையை மீறுவதற்கும் அவனுக்குத் தைரியம் வரவில்லை. ஆகவே, அந்தி மாலையில் அவன் எழுந்திருந்து, நேராகக் கோட்டை மைதானத்திற்குச் சென்றான். அங்கே சிறிது நேரத்திலே குள்ளனும் வந்து சேர்ந்துகொண்டான்.

"தானியேல், இன்றிரவு நாம் நெடுந்தூரம் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கிறது. ஆகையால், என் குதிரைகளுள் ஒன்றுக்குச் சேணம் வைத்துத் தயாராக நிறுத்தி வை! நேற்றிரவு நீயும் நெடுந்தூரம் நடந்ததால் களைத்திருப்பாய்; ஆதலால், உனக்கும் ஒரு குதிரை தயாராயிருக்கட்டும்!" என்று கட்டளையிட்டான், குள்ளன்.

எசமானன் தன்னிடத்திலே காட்டிய பரிவுக்குத் தானியேல் நன்றி சொன்னான். "ஆனால், உங்களுடைய குதிரை லாயம் எங்கேயிருக்கிறது? இங்கே இந்தக் கோட்டை, மைதானம், இதன் ஓரத்திலே ஒரு முள்ளுமரம், அதோ ஒரு குன்று, குன்றின் அடியில் சதுப்பு நிலம் ஆகியவைகளைத் தவிர, வேறு எதையும் காணவில்லையே!" என்று கேட்டான்.

"என்னிடம் கேள்வியே கேட்கக்கூடாது? நேரே அந்தச் சதுப்பு நிலத்திற்குப் போய் முரட்டு நாணலாக இரண்டு நாணல் குச்சிகளைப் பறித்துக்கொண்டு வா!"

அவ்வாறே தானியேல் வாய் பேசாமல் போய், நீண்டு தடித்திருந்த இரண்டு நாணல்களைப் பறித்துக்கொண்டு வந்தான். குள்ளன் அவைகளை என்ன செய்யப் போகிறான் என்று அவனுக்கு விளங்கவில்லை.

அவைகளுள் ஒன்றைக் குள்ளன் வாங்கி, அதன் மேல் ஒரு காலைத் தூக்கிப் போட்டுக்கொண்டு, குதிரைமீது ஏறுவது போலப் பாவனை செய்தான். "நீயும் ஏறிக்கொள், தானியேல்!" என்று அவன் கூவினான்.

"ஐயா, நான் எதன்மீது ஏறிக்கொள்வது? ஒன்றும் புரியவில்லையே!" என்றான், தானியேல்.

"எதில் ஏறுவதா? என்னைப் போல் குதிரைமீது ஏறிக்கொள்! இது தெரியவில்லையா உனக்கு?"

"நாணல் குச்சிமீது என்னை ஏறிக்கொள்ளும்படி சொல்லி என்னைப் பரிகாசம் செய்கிறீர்கள் என்று நினைக்கிறேன். இந்தக் குச்சிதான் குதிரை என்று என்னை நம்பச் சொல்லுகிறீர்களா?"

"வீண் வார்த்தைகள் வேண்டா! 'ஏறு' என்றால் ஏறு!" என்று குள்ளன் வெகுண்டு கத்தினான்; "இதுவரை நீ ஏறிய குதிரைகளெல்லாம் இந்தக் குதிரையின் கால் தூசிக்கு இணையாக மாட்டா!"

ஏதோ குள்ளன் வேடிக்கை செய்கிறானென்றும், அவன் கட்டளையை மீறுவது குற்றமென்றும் கருதி, தானியேல் நாணலைக் குதிரை போல் முன்னால் நீட்டி வைத்து, அதன் மேல் காலைத் தூக்கிப் போட்டுக் கொண்டான்.

குள்ளன், 'பொர்ரம்! பொர்ரம்! பொர்ரம்!' என்று மும்முறை கூவினான். தானியேலும் அவ்வாறே கூவினான். அந்தக் கணத்திலேயே நாணல்கள் இரண்டும் பருத்து வளர்ந்து இரண்டு வண்ணக் குதிரைகளாகிவிட்டன! இரண்டும் வேகமாகப் பாய்ந்து செல்லத் தொடங்கின. தானியேல், குள்ளனைப் பார்த்து, அவன் நாணலை வைத்துக்கொண்டது போல் வைத்துக்கொள்ளாமல், தன் நாணலைத் தலைமாற்றி வைத்திருந்ததால் அவனுடைய குதிரை புறப்படும்பொழுது அவன் குதிரையின் வாலைப் பார்த்து அமர்ந்திருந்தான். குதிரையை நிற்கச்செய்யவும் வழி தெரியவில்லை. எனவே, அவன் குனிந்து, அதன் வாலைப் பலமாகப் பிடித்துக்கொண்டு சென்றான்.

வெகுநேரம் பிரயாணம் செய்தபின் அவர்கள் ஓர் அழகான மாளிகை முன்பு வந்து நின்றனர். குள்ளன், "தானியேல், இனி நான் செய்கின்றவற்றையெல்லாம் கவனித்துக்கொண்டு நீயும் அதைப் போலச் செய்ய வேண்டும். என் பின்னால் தொடர்ந்து ஓடி வா! ஏற்கனவே உனக்குக் குதிரையின் வால் எது, தலை எது என்பதே தெரியவில்லை. இனியும் தலை கிறங்கிப்போய், நீ காலூன்றி நிற்கிறாயா, தலைகீழாக நிற்கிறாயா என்பதுகூடத்

தெரியாமற்போய்விடும். ஏனென்றால், நாள்பட்ட மது ஊமைப் பூனையைக்கூடப் பேச வைக்கும்; ஆனால், பேசும் மனிதனை ஊமையாக்கிவிடும்!" என்று அவனுக்கு எச்சரிக்கை செய்தான்.

பிறகு, அவன் ஏதோ பொருள் விளங்காத மந்திரச் சொற்களை 'மளமள' வென்று உச்சரித்தான். உடனே, தானியேலும் அவ்வாறே சொன்னான். மாளிகைக் கதவில் திறவுகோலுக்காக அமைந்த துவாரத்தின் வழியாக இருவரும் உள்ளே நுழைந்து சென்றனர். உள்ளேயிருந்த பல கதவுகளிலும் அவர்கள் அவ்வாறே நுழைந்து பாய்ந்தனர். கடைசியாக, ஒரு பெரிய கூடத்தை அடைந்தனர். அங்கே பல வகை மதுப்புட்டிகள் அடுக்கி வைக்கப்பெற்றிருந்தன. குள்ளன் ஒவ்வொரு புட்டியாக எடுத்துக் குடிக்கத் தொடங்கினான். தானியேலும் சிறிதும் சளைக்காமல், அவனைப் பின்பற்றிப் புட்டிபுட்டியாகக் காலி செய்தான். "உலகிலேயே தலைசிறந்த எசமானர் நீங்கள்தாம்! உங்களுக்கு ஈடும் கிடையாது, எடுப்பும் கிடையாது! குடிப்பதற்கு இப்படி மது வகைகள் மட்டும் கிடைத்துக் கொண்டிருந்தால், நான் உங்களுக்கே ஊழியம் செய்து கொண்டிருப்பேன்!" என்று கூறி, அவன் குள்ளனைப் போற்றிப் புகழ்ந்தான்.

"நான் உன்னிடத்தில் கபடமில்லாமல் தெளிவாகச் சொன்னபடி நீ வேலை செய்துவந்தால் தக்க பயன் கிடைக்கும். சரி, நேரமாகிவிட்டது! என்னுடன் கிளம்பி வா!" என்றான், குள்ளன்.

அவர்கள் மீண்டும் பல கதவுகளின் துவாரங்களின் வழியாக நுழைந்து வெளிவந்தார்கள். வெளியிலே வைத்திருந்த தங்கள் நாணல்களிலே ஏறிக்கொண்டு, அவர்கள் 'பொர்ரம்! பொர்ரம்! பொர்ரம்!' என்று கூவிய வுடன், இரண்டு குதிரைகளும் தோன்றி, வாயுவேகத்தில் பாயத் தொடங்கின. அந்த வேகத்தில் மேகங்களெல்லாம் பனிப் பந்துகளைப் போலச் சிதறி ஓடின.

அவர்கள் மீண்டும் கோட்டை மைதானத்தை அடைந்ததும் குள்ளன் தானியேலை வீட்டுக்கு அனுப்பி விட்டான். மறுநாள் அதே நேரத்தில் அதே இடத்திற்கு வந்து சந்திக்க வேண்டுமென்று அவன் ஆணையிட்டான்.

இவ்வாறு அவர்கள் ஒவ்வோர் இரவிலும் ஒவ்வொரு திசைக்குச் சென்று வந்தனர். வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு என்று எல்லாத் திசைகளிலும் சென்று, அயர்லாந்தி லுள்ள மதுக்கிடங்குகள் அனைத்தையும் அவர்கள் பார்த்து முடித்துவிட்டனர். எங்கு, என்ன வகை மது உண்டென்பதை அவர்களைப் போல வேறு எவரும் அறிந்திருக்கவில்லை. அவர்கள் உருசி பார்க்கவேண்டிய மதுவே பாக்கியில்லை எனலாம்.

ஒரு நாள் இரவில் தானியேல், கோட்டை மைதானத்தில் குள்ளனைக் கண்ட பொழுது, வழக்கம் போல் நாணல்கள் பறித்து வரப் புறப்பட்டான். அப்பொழுது குள்ளன், “தானியேல், இன்று கூடுதலாக ஒரு குதிரை இருந்தால் நலம்! திரும்பி வரும் பொழுது நம்முடன் வேறோர் ஆளும் வரக்கூடும்!” என்றான். தானியேல் ‘ஏன்? எதற்கு?’ என்று கேள்விகள் கேட்பதை முன்பே விட்டுவிட்டான். குள்ளன் சொல்வதைச் செய்வதே தன் கடனென்று அவன் எண்ணினான். சதுப்பு நிலத்திற்குப் போகும்பொழுது அவனாகச் சிந்தனை செய்து பார்த்தான். ஒருவேளை, எசமானன் கூடுதலாக மற்றொரு வேலை யாளைச் சேர்த்துவரக்கூடுமென்று அவன் எண்ணினான். ‘அப்படி ஒருவன் வந்து சேர்ந்தால், அவன் என் கையாளாக இருப்பான். ஒவ்வொரு நாளும் நானே போய்க் குதிரைகள் தயாரிக்கும் வேலையை இனி அவன் செய்வான். நானும் ஒரு கனவான்தானே! முதலாளியைவிட நான் எதிலே குறைந்தவன்?” என்றும் அவன் எண்ணமிட்டான்.

அவர்கள் இருவரும் குதிரைகள்மீது ஏறிக்கொண்டு புறப்பட்டனர். மூன்றாவது குதிரையின் கயிற்றையும் தானியேல் பற்றிக்கொண்டிருந்தான். இருவரும் வழியில் எங்கும் நிற்கவேயில்லை. **லிமெரிக்** தாலுகாவில் ஒரு குடியானவனுடைய வசதியான பெரிய வீட்டின் முன்பு சென்ற பிறகுதான் அவர்கள் குதிரைகளை நிறுத்தினார்கள். வீட்டினுள்ளே பலர் கூடிக் கும்மாளமடித்துக்கொண் டிருப்பதாகத் தெரிந்தது. இடையிடையே வாத்தியங்களின் இசையும் ஒலித்தது. குள்ளன் சிறிது நேரம் செவி கொடுத்து உள்ளே நடப்பதைக் கவனித்துவிட்டு, திடீரென்று தன்

பணியாள் பக்கம் திரும்பி, "தானியேல், நாளையோடு எனக்கு ஆயிரம் ஆண்டுகள் பூர்த்தியாகின்றன!" என்றான்.

"கடவுள் நம்மை ஆசீர்வதிக்கட்டும், ஐயா!" என்றான், தானியேல்.

"அந்தப் பெயரை இனிமேல் ஒருகாலும் சொல்லி விடாதே, தானியேல்! இல்லையென்றால், நீயே என் அழிவுக்குக் காரணமாவாய். நான் உலகிலே தோன்றி நாளையோடு வயது ஆயிரம் நிறைவேறுவதால் நான் திருமணம் செய்துகொள்வது நலமென்று கருதுகிறேன்!"

"நானும் யாதோர் ஐயமுமில்லாமல் அவ்விதமே எண்ணுகிறேன். தங்களுக்குத் திருமணத்தில் நாட்டமிருந் தால் போதும்!"

'அதற்காகத்தான் நான் இந்தக் காரிகோகுன்னியெல் என்ற கிராமத்தை நோக்கி இவ்வளவு தூரம் வந்திருக் கிறேன். இங்கே, இந்த வீட்டில், இன்றிரவு இரைலீ என்ற பெண் உரூனே என்பவனை மணந்துகொள்ளப்போகிறாள். அவள் நல்ல உயரமும் அழகும் கொண்டவள். நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவள். அவளை நானே மணந்து கொண்டு, அழைத்துச் செல்ல விரும்புகிறேன்!"

"அதற்கு அவள் என்ன சொல்லுவாளோ?"

குள்ளனின் முகம் கடுகடுத்தது. "பேசாதே! என்னிடம் கேள்விகள் கேட்பதற்காக உன்னை நான் என்னுடன் அழைத்து வரவில்லை" என்று சொல்லி அவன் அதட்டினான். மேற்கொண்டு விவாதம் செய்யாமல், அவன் வழக்கமான மந்திரச் சொற்களைச் சொல்லத் தொடங்கினான். தானியேலும் அவைகளைச் சொல்லிக் கொண்டான். காற்றைப் போல் திறவுகோல் துவாரத்தின் வழியாக எந்தக் கதவையும் தாண்டிச் செல்லும் ஆற்றலை அளிப்பவை அந்தச் சொற்கள். குள்ளன் சொன்னதை அப்படியே திரும்பச் சொல்லியதில் தானியேல் தன்னை ஒரு மேதாவியென்று எண்ணிக்கொண்டான்.

இருவரும் உள்ளே சென்றதும், குள்ளன் கூடத்தி லிருந்த ஒரு விட்டத்தில் ஏறி அமர்ந்துகொண்டான். தானியேலும் அவனுக்கு எதிர்ப்புறத்தில் வேறொரு விட்டத்தில் அமர்ந்துகொண்டான். உயரே இருந்தால் கீழே

நடப்பவைகளைக் கவனிக்க முடியும் என்பதற்காக அவர்கள் இப்படிச் செய்தனர். குள்ளன், ஒரு கிளையிலே குந்துவது போலத் தன் உடலையெல்லாம் சுருட்டி மடக்கிக்கொண்டு வசதியாக இருந்தான். ஆனால், தானியேலுக்கு இது வழக்கமில்லை. கால்களைத் தொங்கவிட்டுக்கொண்டு, ஒரு கட்டையிலே உட்கார்ந்திருப்பதில் அவன் மிகவும் அவதிப்பட்டான்.

கூடத்திலே நடந்த வேடிக்கைகளை அவர்கள் கவனித்தனர். ஒரு பக்கத்திலே மேளகாரர், அவர்களுக்கு அருகிலே பாதிரியார், இரைலீயின் தந்தை, மணமகன் உரேனேயின் இரு சகோதரர்கள் மற்றும் உறவினர்கள் நின்றுகொண்டிருந்தனர். மற்றொரு பக்கத்திலே உரேனேயின் தந்தையும் தாயும், தாயின் சகோதரிகள் நால்வரும், சகோதரர்கள் மூவரும் உயர்ந்த ஆடைகளணிந்து மிடுக்குடன் நின்றுகொண்டிருந்தனர். மற்றும், மாமன்மார்கள், மாமியர்கள் முதலிய பலரும் உற்சாகமாகச் சூழ்ந்து நின்றுகொண்டிருந்தனர். மேசைகளிலே பரிமாறப் பெற்றிருந்த உணவு வகைகளைப் பார்த்தால் வந்திருந்த விருந்தினர்களைப் போல இருமடங்குப் பேர்களுக்குப் போதுமானவை என்று தோன்றும்.

எல்லோரும் மேசைகளைச் சுற்றி நாற்காலிகளில் வந்து அமர்ந்தார்கள். மணமகனின் அன்னை திருமதி **உரேனே** எழுந்திருந்து, முதன் முதலாகப் பாதிரியாருடைய தட்டில் ஒரு பணியாரத்தை எடுத்து வைத்தாள். மங்கலமான அந்த வேளையில், சகுனத் தடை போல மணப்பெண் ஒரு தும்மல் தும்மினாள். அந்த மேசையில் அமர்ந்திருந்தவர்கள் அனைவரும் திடுக்கிட்டுப்போயினர். ஆனால், ஒருவர்கூட அப்பொழுது 'கடவுள் நம்மைக் காப்பாராக!' என்று சொல்லவில்லை. எல்லோரும் பாதிரியாரே சொல்லியிருப்பாரென்று எண்ணியிருந்தனர். ஆனால், அவரோ பணியாரத்திலேயே கவனமாயிருந்ததால், அச்சொற்கள் அவர் தொண்டையிலிருந்து வெளிவரவில்லை. ஒரு கணத்திற்குப் பின், ஆண்டவனின் அருளை வேண்டிக் கொள்ளாமலே, விருந்து தொடங்கிவிட்டது.

உயரே அந்தரத்தில் அமர்ந்திருந்த தானியேலும் அவனுடைய கூட்டாளியும் கீழே நடந்ததைக் கவனிக்காம

வில்லை. குள்ளன் மகிழ்ச்சியோடு ஒரு காலைத் தொங்க விட்டுக்கொண்டான். அவனுடைய கண்களில் புதிய ஒளி வீசிற்று. அவன் மணமகளை ஒரு முறை ஆவலோடு பார்த்துக்கொண்டு, தானியேல் பக்கம் திரும்பி, "பாதி அளவுக்கு அவள் என்னுடையவளாகிவிட்டாள். இன்னும் இரண்டு முறை அவள் தும்மிவிட்டால், பிறகு அவள் முழுதும் என் மனைவியாகிவிடுவாள்! பாதிரியார், அவருடைய வேத நூல், மணமகன் முதலிய யாரும், எதுவும் குறுக்கே நின்று தடுக்க முடியாது!" என்று சொன்னான்.

உடனே அழகி இரைலீ மறுபடி தும்மினாள்; அவள் தும்மியது பலருக்குத் தெரிந்திருக்க முடியாது. அவ்வளவு மெதுவாகவே தும்மினாள். ஆனால், குள்ளன் அதைக் கவனித்துவிட்டான். அப்பொழுது அங்கிருந்த எவரும், 'கடவுள் நம்மைக் காப்பாராக!' என்று சொல்லவேயில்லை. அந்தச் சிந்தனையே ஒருவருக்கும் எழவில்லை.

தானியேல் நெடுநேரமாக மணமகள் இரைலீயைப் பற்றியே கவலை கொண்டிருந்தான். பத்தொன்பது வயதுள்ள அந்த மங்கையின் அழகும் கருநீலக் கண்களும் பளபளப்பான உடலும் சிவந்த கன்னங்களும் ஊக்கமும் உற்சாகமும் உயிர்த்துடிப்பும் எங்கே - ஆயிரம் வயதுக்கு ஒரு நாள் குறையுள்ள விகாரமான குள்ளன் எங்கே? 'கூனிக் குறுகிக் கிடக்கும் இவனல்லவா அந்தப் பெண்ணின் வாழ்க்கையைப் பாழாக்க எண்ணியிருக்கிறான்!' என்று அவன் எண்ணினான்.

அந்த நேரத்தில் மணமகள் மூன்றாவது முறையாகத் தும்மிவிட்டாள். உடனே தானியேல், தன் முழு வல்லமையையும் சேர்த்துக்கொண்டு, மிகவும் உரத்த குரலில், "கடவுள் நம்மைக் காப்பாராக!" என்று கூவிவிட்டான். இது அவனுடைய சிந்தனையின் எதிரொலியாக ஏற்பட்டதா அல்லது அவனுடைய சுபாவத்தினால் ஏற்பட்டதா என்று அவனுக்கே தெரியவில்லை. ஆனால், அந்தச் சொற்களைக் கேட்டவுடனே குள்ளனின் முகம் சிவந்துவிட்டது. கோபம் ஒரு புறம், ஏமாற்றம் ஒரு புறம் அவனை உலுக்கிவிட்டன. அவன் தன் விட்டத்திலே எழுந்து நின்றுகொண்டு, கீச்சுக் குரலில், "தானியேல், உன்னை என் வேலையிலிருந்து

நீக்கியுள்ளேன்! உனக்குச் சம்பளம் இதுதான்!" என்று கூறிக்கொண்டே ஒரு காலால் தானியேலின் முதுகில் பலமாக உதைத்தான். அதனால் தானியேல் நிலை தடுமாறி விட்டத்திலிருந்து கீழே உணவு மேசைமீது தலைகுப்புற விழுந்தான். இந்த நிகழ்ச்சி அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது என்றால், அங்கே கூடியிருந்தவர்கள் எவ்வளவு ஆச்சரியப்பட்டிருப்பார்கள்!

கீழே விழுந்த தானியேல், நடந்த கதை முழுவதையும் கூட்டத்திலிருந்த அனைவருக்கும் தெரிவித்தான். அதைக் கேட்ட பாதிரியார், கையிலிருந்த கத்தியையும் முள்ளையும் போட்டுவிட்டுத் திருமணச் சடங்கைத் தொடங்கி வைத்து வேகமாக முடித்துவிட்டார். பிறகு, நடனங்கள் நடந்தன. தானியேலும் சிறிது நேரம் ஆடினான். ஆனால், நடனத்தைக்காட்டிலும் அவன் விரும்பியது மதுவைத்தான். ஆதலால், அவன் ஆவலோடு மதுவருந்தத் தொடங்கி, அதிலேயே மூழ்கிவிட்டான்.

# 3. சீமாட்டி காதலீன்

பல்லாண்டுகளுக்கு முன்னே, அயர்லாந்து தேசத்தில், எங்கிருந்தோ இரண்டு வணிகர்கள் வந்து குடியேறினார்கள். அவர்களைப்பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது. அவர்கள் அந்நாட்டு மொழியாகிய 'கெயிலிக்' மொழியை நன்றாகப் பேசினார்கள். அபூர்வமான விலையுயர்ந்த உடைகளை அவர்கள் அணிந்திருந்தார்கள்.

அவர்கள் பெருஞ்செல்வர்கள். இருவரும் ஒரே வயதுடையவர்களாகத் தோன்றினார்கள்; இருவருக்கும் சுமார் ஐம்பது வயதிருக்கும். நெற்றியிலே படர்ந்த இரேகைகளையும் சுருக்கங்களையும் நரைத்த தாடியையும் பார்த்தாலே அவர்கள் வயது முதிர்ந்தவர்கள் என்பது தெரிந்துவிடும்.

அவர்கள் தங்கியிருந்த சத்திரத்திலே அவர்களைப் பற்றி எதுவும் தெரிந்துகொள்ள முடியவில்லை. அவர்களுடைய நோக்கம் என்ன, தொழில் என்ன, என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்று ஒருவருக்கும் தெரியாது. அவர்கள் அவ்வளவு ஒதுங்கி அமைதியாக வாழ்ந்து வந்தார்கள். அங்கே அவர்கள் தங்கியிருந்த காலத்தில், நாள் தோறும் தங்களுடைய பண மூட்டைகளை அவிழ்த்துத் தங்க நாணயங்களை எண்ணி எண்ணி மீண்டும் கட்டி வைப்பதே அவர்களுடைய வேலை. வெளியிலே இருந்து கொண்டு சாளரங்களின் வழியாகப் பார்த்தாலே உள்ளேயிருந்த பொற்காசுகளின் மஞ்சள் நிறமான ஒளி வீசுவதைக் கண்டுகொள்ளலாம்.

சத்திரத்து நிர்வாகியான சீமாட்டி அவர்களிடம் ஒரு நாள் பேசிப் பார்த்தாள்: "இவ்வளவு பணக்காரர்களா யிருக்கும் நீங்கள் ஏழை மக்களின் துன்பத்தை நீக்க ஓர் உதவியும் செய்வதில்லையே! தான தர்மங்கள் எதுவும் செய்வது உங்களுக்கு வழக்கமில்லையோ?" என்று அவள் கேட்டாள்.

"பலர் ஏழைகளைப் போல வேடம் தரித்து வந்து ஏமாற்றிவிடுவார்கள். அதனால்தான் நாங்கள் உண்மையான ஏழைகளுக்கு உதவிசெய்ய முடியாமலிருக்கிறது. உதவி தேவையுள்ளவர்கள் வந்து எங்கள் கதவைத் தட்டினால், நாங்கள் அதைத் திறக்கத் தயங்குவதில்லை!" என்று அவர்களுள் ஒருவன் பதிலளித்தான்.

இது நிகழ்ந்த மறுநாள், இரண்டு வணிகர்களும் மக்களுக்குப் பொன்னாக வாரி இறைக்கிறார்கள் என்ற வதந்தி வெளியே எங்கும் பரவிவிட்டது. அவர்கள் தங்கியிருந்த இடத்தைப் பெருங்கூட்டமாக ஜனங்கள் சூழ்ந்துகொண்டனர். ஆனால், உள்ளே சென்று வெளி வந்தவர்களுள் சிலரே கௌரவத்துடன் தலைநிமிர்ந்து சென்றார்கள்; பலர் அவமானத்தால் முகம் சிறுத்து வாடியிருந்தார்கள்.

இரண்டு வியாபாரிகளும் என்ன வியாபாரம் செய்து கொண்டிருந்தார்கள்? சயித்தானுக்காக* ஆன்மாக்களை விலைக்கு வாங்கிக்கொண்டிருந்தார்கள்! இதுதான் அவர்களுடைய தொழில். வயது முதிர்ந்தவர்களின் ஆன்மா ஒன்றுக்கு இருபது பொற்காசுகள் விலை; ஒரு பைசா கூடுதலாகக் கொடுக்கமாட்டார்கள். விவாகமான ஸ்திரீகளின் ஆன்மாவுக்கு மதிப்பு ஐம்பது பொற்காசுகள். அவர்களிலே விகாரமான தோற்றமுடையவர்களின் ஆன்மாவுக்கு நூறு பொற்காசுகள். இளவயது மங்கையரின் ஆன்மாக்களுக்கு மதிப்பு மிக அதிகம். பரிசுத்தமான புது மலர்களுக்குக் கிராக்கி அதிகமல்லவா!

அந்தக் காலத்தில், அந்த நகரிலே, பேரழகும் பெருந்தன்மையும் வாய்ந்த **காதலீன் ஓ'ஹீ** என்ற சீமாட்டி ஒருத்தி இருந்தாள். மக்களெல்லோரும் அவளிடம் அன்பு கொண்டு அவளைப் போற்றி வந்தார்கள். ஏழைகளுக்கு அவள் உற்ற துணையாக விளங்கினாள். வணிகர்கள், மக்களின் துயரங்களைப் பயன்படுத்திக்கொண்டு ஆண்டவனை அவர்கள் மறக்கும்படி செய்து வந்ததை

---

*** சயித்தான் - ஆண்டவனின் பகைவன்; மக்களைப் பாவம் செய்யத் தூண்டுபவன்.**

அவள் அறிந்ததும், அவள் தன் கணக்குப்பிள்ளையை அழைத்தாள்.

"கணக்குப்பிள்ளை ! நம்முடைய இரும்புப் பெட்டியில் பொற்காசுகள் எவ்வளவு இருக்கின்றன?"

"நூறாயிரம்."

"நகைகள்?"

"அவைகளும் நூறாயிரம் பொற்காசுகள் பெறும்."

"மாளிகைகள், நிலங்கள், காடுகள் - எல்லாம் எவ்வளவு பெறும்?"

"நான்கு இலட்சம் பொற்காசுகள்."

"சரிதான், தங்கமாயில்லாதவைகளையெல்லாம் உடனே விற்றுத் தங்கம் வாங்கிவிடுங்கள். வாங்கிய பின் கணக்கை என்னிடம் கொண்டுவந்து காட்டுங்கள். இந்த மாளிகையையும் இதைச் சுற்றியிருக்கும் நிலத்தையும் மட்டும் விற்காமல் வைத்துக்கொள்வோம் !"

இரண்டு நாள்களிலே அவளுடைய கட்டளை நிறைவேற்றப்பட்டது. ஏராளமான பொற்காசுகள் குவிந்து விட்டன. அந்தப் புனிதவதி, ஏழை மக்களை அழைத்து, அவர்களுடைய தேவைகளை அறிந்து, அவற்றிற்குத் தக்கபடி பொருள் கொடுத்து உதவினாள். இதனால் நகரில் ஆன்மாக்களை விற்பதற்கு ஆள்கள் போகவில்லை. சயித்தான் தன் காரியம் தடைப்படுவதைக் கண்டு, உண்மையை ஆராய்ந்து தெரிந்துகொண்டான். சீமாட்டியின் செல்வமே தனக்கு இடையூறாயிருந்ததால், அதைக் கவர்வதற்கு அவன் ஏற்பாடு செய்தான். அவளுடைய மாளிகையிலே வேலை பார்த்து வந்த ஒரு துரோகியின் உதவியால், சீமாட்டி காதலீனின் பொருள் அனைத்தும் திருடர்களால் கொள்ளையிடப்பட்டது. அவள் எவ்வளவு தடுத்துப் பார்த்தும் பயனில்லாது போய்விட்டது. அவள் தன் கைகள் இரண்டையும் சிலுவை * போல் சேர்த்து வைத்துக்கொள்ள வாய்ப்புக் கிடைத்திருந்தால், திருடர்கள்

* கடவுளின் திருநாமத்தைக் கேட்டாலும், சிலுவை முதலிய புனிதமான சின்னங்களைக் கண்டாலும், சயித்தானும், அவனுடைய கூட்டத்தாரும் ஓடிவிடுவார்கள்.

வெற்றி பெற்றிருக்க முடியாது. ஆனால், அவர்கள் அவளுடைய கைகளைப் பிடித்துக்கொண்டிருந்தனர். கொள்ளையும் நடந்து முடிந்துவிட்டது.

பின்னால், ஏழைகள் காதலீனிடம் சென்று துயரங்களைக் களையும்படி வேண்டிய பொழுது அவளால் எந்த உதவியும் செய்ய முடியவில்லை. அவள் குடியிருந்த மாளிகையைக்கூட ஏழைகளுக்குக் கொடுத்திருந்தாள்.

இடையில் மக்களின் நிலை மிகவும் அவலமாய்ப் போய்விட்டது. ஊரிலே போதுமான தானியங்களும் உணவுப் பொருள்களும் இல்லை. மேலை நாடுகளிலிருந்து அவை வந்து சேர எட்டு நாள்கள் செல்லுமென்று சொல்லப்பட்டது. அந்த எட்டு நாள்களும் எட்டு யுகங்கள் தாம்! அந்த நாள்களைக் கழிப்பது எப்படியென்று சாதாரண மக்கள் எல்லோரும் தயங்கித் தவித்தார்கள். அவர்கள் பட்டினி கிடந்து மடிய வேண்டும், அல்லது வேதப் புத்தகம் அறிவித்துள்ள நேர்மை, நீதிகளையெல்லாம் காற்றிலே பறக்கவிட்டுத் தங்களுடைய ஆன்மாக்களை விற்றுவிட வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டது. ஆண்டவன் அளித்த பேறுகளுள் ஆன்மாக்களுக்கு இணையானவை எவை? அத்தகைய கிடைத்தற்கரிய ஆன்மாக்களையும் மக்கள் விற்றுவிடும்படி நேர்ந்ததைக் கண்டு சீமாட்டி காதலீன் கண்ணீர் வடித்தாள். தன் கூந்தலைப் பிய்த்துக்கொண்டு கதறினாள். மலர் போன்ற தன் மார்பிலே அடித்துக் காயப்படுத்திக்கொண்டாள். பிறகு, திடீரென்று அவள் எழுந்திருந்தாள். அவள் நெஞ்சிலே ஓர் உறுதி தோன்றிவிட்டது.

அவள் நேராக ஆன்மாக்களை விலைக்கு வாங்கும் இரு வியாபாரிகளையும் நாடிச் சென்றாள்.

"தங்களுக்கு என்ன வேண்டும்?" என்று அவர்கள் கேட்டார்கள்.

"நீங்கள் ஆன்மாக்களை விலைக்கு வாங்குகிறீர்களா?"

"ஆம், இன்னும் சில ஆன்மாக்கள் கிடைத்தால் வாங்கலாம். அதிகமாக வாங்க முடியாதபடி நீங்களே செய்துவிட்டீர்களே!"

"இன்று உங்களுக்கு நல்ல இலாபம் கிடைக்கும்படி செய்வதற்காக நான் வந்திருக்கிறேன் !"

"என்ன?"

"நான் ஓர் ஆன்மாவை விற்க வந்திருக்கிறேன். ஆனால், அதன் மதிப்பு அதிகம் !"

"மதிப்பு அதிகமென்றால் என்ன? வயிரத்தின் மதிப்பு அதன் பளபளப்பைப் பொறுத்தது, அது போலத்தான் ஆன்மாவும்."

"என்னுடைய ஆன்மாதான் அது !"

சயித்தானின் பிரதிநிதிகள் இருவரும் திடுக்கிட்டுப் போயினர். அவர்களுடைய சாம்பல் நிறக் கண்களில் ஒளி வீசிற்று. அப்பழுக்கற்ற பரிசுத்தமான கன்னி காதலீனின் ஆன்மா - அதற்கு ஈடான பொக்கிஷம் வேறு என்ன இருக்கிறது என்று கருதி அவர்கள் திகைத்தார்கள்.

"அழகு மிகுந்த அம்மையே, தங்களுக்கு எவ்வளவு பொருள் வேண்டும்?"

"ஒன்றரை இலட்சம் பொற்காசுகள்."

"அப்படியே வாங்கிக்கொள்ளுங்கள் !" என்றனர். இரு வணிகர்களும், உடனே ஆன்ம விக்கிரயப் பத்திரம் ஒன்றை அவளிடம் நீட்டினார்கள். அவள் துணுக்கத்தோடு பதறிக் கொண்டே அதில் கையெழுத்திட்டாள்.

தொகை முழுதும் அவளிடம் எண்ணி ஒப்படைக்கப் பட்டது.

அவள், மாளிகைக்குத் திரும்பியதும் கணக்குப் பிள்ளையை அழைத்து, "இதைப் பகிர்ந்து தானமாகக் கொடும் ! இந்தப் பணத்தைக்கொண்டு ஏழைகள் எட்டு நாள்களைக் கழித்துவிட முடியும். அவர்களுடைய ஆன்மாக்களுள் ஒன்றைக்கூட விற்கவேண்டிய அவசியம் ஏற்படாது" என்று கூறினாள்.

இதற்கப்பால் அவள் தன்னுடைய அறைக்குள்ளே சென்று கதவை அடைத்துக்கொண்டாள். எவரும் தன்னைத் தொந்தரவு செய்யக்கூடாதென்று அவள் முன்னதாகவே எல்லோர்க்கும் சொல்லி வைத்திருந்தாள்.

மூன்று நாள்கள் கழிந்தன; அவள் வெளியில் வரவேயில்லை, எவரையும் அழைக்கவுமில்லை.

கதவைத் திறந்து பார்த்த பொழுது, அவள் சோகத்தால் மரணமடைந்து விறைத்துக் கிடந்தாள்!

ஆனால், அவளுடைய ஆன்ம விக்கிரயப் பத்திரம் செல்லாது என்று ஆண்டவன் முடிவு செய்துவிட்டான். தர்மத்திலே தலைசிறந்த அவளுடைய ஆன்மா, ஆயிரக் கணக்கான ஆன்மாக்களை முடிவில்லாத மரணத்திலிருந்து காப்பாற்றிய அந்தப் பரிசுத்த ஆன்மா சயித்தானுக்குச் சொந்தமில்லையென்பது ஆண்டவன் தீர்ப்பு.

மேலே குறித்த எட்டு நாள்களும் கழிந்த பிறகு கப்பல்களில் ஏராளமான உணவுப்பொருள்கள் நாட்டிலே வந்து குவிந்தன. பசியும் பட்டினியும் மறைந்துவிட்டன. சத்திரத்திலே தங்கியிருந்த இரு வணிகர்களும் தங்கள் கடையைக் கட்டிக்கொண்டு எங்கே சென்றார்கள் என்பது தெரியவில்லை.

## 4. இரண்டு மல்லர்கள்

அயர்லாந்தின் ஹெர்க்குலிஸ் என்று புகழ்ப்பெற்ற மாமல்லனாகிய ஃபின் மக்கௌல் என்பவனைப்பற்றிக் கேள்விப்பட்டிராத ஆணோ பெண்ணோ குழந்தையோ நாட்டில் கிடையாது. கிளீயர் முனையிலிருந்து அசுரன் தாம்போதிவரை எல்லா மக்களும் அவனைப்பற்றித் தெரிந்திருந்தனர். அசுரன் தாம்போதியிலிருந்துதான் நமது கதையும் தொடங்குகின்றது. வல்லமை மிக்க மக்கௌலும் அவனுடைய உறவினர்களும் அந்தத் தாம்போதியை அமைக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தனர். ஒரு சமயம் மக்கௌல் ஊருக்குப் போய்த் தன் மனைவி ஊனாக் என்பவளைப் பார்த்துவர விரும்பினான். அவளிடம் அவனுக்குப் பிரியம் அதிகம். இரவு நேரத்தில் அவளுக்கு அடிக்கடி மயக்கம் ஏற்படுவதுண்டு; ஆகையால், அவளுடைய உடல் நிலையை அறிந்துவர அவன் புறப்பட்டான். நடக்கும் பொழுது கையிலே பிடித்து ஊன்றிக்கொள்வதற்காக, அவன் ஒரு தேவதாரு மரத்தை வேரோடு பிடுங்கி, கிளைகளை ஒடித்தெறிந்துவிட்டு, அதையே கழியாக எடுத்துக்கொண்டான்.

மக்கௌலின் வீடு நாக்மேனி என்ற குன்றின் உச்சியில் அமைந்திருந்தது. அங்கிருந்து நோக்கினால் குல்லமோர் மலை முழுதும் தெரியும்.

மக்கௌல், மனைவியைப் பார்க்கத்தான் புறப்பட்டுச் செல்வதாக எல்லோரும் எண்ணினார்கள். அதற்கு வேறு ஒரு முக்கியமான காரணமும் உண்டு. அந்தக் காலத்தில் குகுல்லின் என்று வேறு ஒரு மல்லனும் இருந்தான். அவனை மல்லன் என்பதைவிட அசுரன் என்று சொல்வது பொருந்தும். அவன் உருவமும் ஆற்றலும் அப்படிப் பட்டவை. சிலர் அவனை ஐரிஷ்காரன் என்பார்கள். வேறு சிலர் அவன் ஸ்காட்லாந்து நாட்டான் என்றும் சொல்வார்கள். அந்தக் காலத்தில் அவன் கிளம்பிவிட்டால்,

அவனை எதிர்த்து நிற்க ஆளே கிடையாது. அவனுக்குக் கோபம் வந்தால், ஒரு காலால் தரையைத் தட்டுவானாம்; உடனே சுற்றியுள்ள பூமியே கிடுகிடுத்து ஆடுமாம்! அவன் அசுரப் பிறவியாயிருந்ததால், சாதாரண மனித இனத்தைச் சேர்ந்த எவனும் அவனை எதிர்த்து நிற்க முடியாதென்று மக்கள் தெரிந்திருந்தனர். ஒரு சமயம் இடியிடிக்கும் பொழுது, அவன் ஒரே கையால் ஓங்கியடித்து, இடியிலே தோன்றிய வச்சிராயுதத்தைச் சப்பையாக்கிச் சட்டைப் பையிலே தூக்கிப் போட்டுக்கொண்டான் என்று கூறுவதுண்டு. அது உண்மைதானா என்பது தெளிவாய்த் தெரியாது.

அயர்லாந்திலிருந்த பயில்வான்கள், மல்லர்கள் பலரையும் அவன் மட்டம் தட்டிவிட்டான். ஆனால், மல்லன் மக்கெளல் மட்டும் அவனிடம் சிக்கவேயில்லை. மக்கெளலையும் எங்காவது கண்டுபிடித்து, அவன் முதுகிலும் மண் புரட்டிக்காட்ட வேண்டுமென்பது அவனுடைய ஆசை. கோழி, குப்பை மேட்டில் ஏறி அமர்வது போல, மக்கெளல் குன்றின் மேல் வசித்து வந்த போதிலும், அசுரன் அவனை விடுவதாயில்லை; அவனைத் தேடிக்கொண்டேயிருந்தான். ஆனால், ஒரே காலால் பூகம்பம் விளைவிப்பவனும், ஒற்றைக் கையால் வச்சிரா யுதத்தைச் சப்பையாக்குபவனுமான அசுரனை அவன் எப்படி எதிர்த்து நிற்க முடியும்? குகுல்லின் தாம்போதிக்கே வந்து தன்னைச் சந்திக்கப்போவதாகக் கேள்விப்பட்டுத்தான் மக்கெளல் அங்கிருந்து கிளம்பிவிட்டான். திடீரென்று மனைவியிடமும் பாசமும் பெருகிவிட்டது. உடனே ஊரை நோக்கிக் கிளம்பிவிட்டான். முன் சொன்னது போல் முழுத் தேவதாரு மரம் அவனுக்கு ஊன்றுகோலாக அமைந் திருந்தது.

நாக்மேனிக் குன்றின் மேல் குடிசை கட்டிக் குடியிருப்பதுபற்றிப் பலர் மக்கெளலிடமே கேட்டிருக்கின் றனர். "ஏனப்பா, மக்கள் இருக்கும் இடங்களை விட்டுவிட்டு, அவ்வளவு உயரே வீடு வைத்துக்கொண்டிருக்கிறாய்? பெரும்பாலும் நீ வீட்டிலிருப்பதில்லை. குன்றின் மேலே மழையும் பனியும் அதிகம். மேலும், அங்கே குடிக்க நல்ல தண்ணீர்கூடக் கிடையாதே!'' என்று அவர்கள்

கேட்பதுண்டு. குன்றின் உச்சியிலிருந்தால்தான் சுற்றியுள்ள காட்சிகளைக் கண்டுகளிக்க முடியுமென்றும், எந்த நேரமும் இளந்தென்றல் வீசுமென்றும், தாம்போதி வேலை முடிந்த பிறகு குன்றிலே தான் சூழாய் வைக்கப்போவதாகவும் அவன் பதிலுரைப்பது வழக்கம்.

ஆனால், உண்மையில் குகுல்லினுக்காகவே அவன் குன்றின் மேல் குடியிருந்தான். அங்கிருந்து அவன் குகுல்லின் என்று வந்தாலும் எளிதில் கண்டுகொள்ள முடியும்.

மக்கௌல் தன் வீட்டுக்குள்ளே நுழைந்ததும் மனைவியின் உடல்நலம்பற்றி விசாரித்தான். சிறிது நேரத்திற்குப் பின் அவள், "நீங்கள் என்ன விரைவிலே வீட்டுக்குத் திரும்பி வந்துவிட்டீர்கள்?" என்று கேட்டாள்.

"உன்மீதுள்ள அன்பினால்தான். இது உனக்கே தெரியுமே!" என்றான், கணவன்.

ஊனாக்குடன் அவன் இரண்டு மூன்று நாள்களை இன்பமாகக் கழித்தான். ஆனால், அவன் மனத்தில் குகுல்லினைப்பற்றிய சிந்தனை அகலவேயில்லை. அவனுடைய கவலை என்ன என்பது தெரியாமல் அவன் மனைவி அதனைக் கண்டுபிடிக்கப் பலவாறு முயன்று பார்த்தாள்.

கடைசியாக அவனே தன் கவலையைக் கூறிவிட்டான்: "இந்தக் குகுல்லின் நினைவுதான் என்னை வருத்தி வருகிறது. அவனுக்குக் கோபம் வந்தால் நிலமே ஆடும்படி மிதிப்பானாம், இடியை நிறுத்திவிடுவானாம், வச்சிரா யுதத்தைச் சப்பையாக்கிச் சட்டைப்பையில் வைத்துக் கொண்டு திரிகிறானாம்!"

அவன் ஆத்திரத்துடன் பேசும் பொழுது வலக்கைக் கட்டைவிரலால் வாயைத் தட்டிக்கொள்வது வழக்கம். அதே போல அப்பொழுதும் செய்தான். அதைக் கண்டு ஊனாக், "என் பேரில் ஒன்றும் கோபமில்லையே?" என்று கேட்டாள்.

"இல்லை, இல்லை. விரலைக் கடித்துக்கொள்வது என் வழக்கந்தானே!"

"கடித்துக் கடித்து இரத்தம் வந்துவிடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்!"

மக்கௌல் வெகுதூரத்திற்கு அப்பால் எதையோ கவனித்துவிட்டு, "அவன் வருகிறான் ! டங்கன்னான் அருகில் அவன் உருவம் தெரிகிறது !" என்றான்.

"யாரவன்? கடவுள்தான் நம்மைக் காக்க வேண்டும் !"

"அவன்தான் குகுல்லின்! எப்படிச் சமாளிப்பது என்று ஒன்றும் புரியவில்லையே! நான் ஓடிப் போய்விட்டால் கேவலம்; என்றாவது ஒரு நாள் அவனைச் சந்திக்காமலும் முடியாது!"

"அவன் இங்கே எப்பொழுது வந்து சேருவான்?"

"நாளை, சுமார் இரண்டு மணிக்கு."

"நாதா, கவலைப்பட வேண்டா! என்னை நம்புங்கள். இந்தச் சிக்கலில் என்னால் முடிந்ததைச் செய்து நாம் தப்பித்துக்கொள்ள வழி செய்கிறேன். நீங்கள் வழக்கம் போல் விரலைக் கடித்துக்கொண்டு தனியாக இதிலே வெற்றி பெறுவது கடினம்!"

மனைவியின் சொற்கள் மக்கௌலுக்குச் சற்றே ஆறுதலளித்தன. ஊனாக் கெட்டிக்காரி. அவளுக்கு வன தேவதைகள் எல்லாம் பழக்கம். ஒரு வேளை, அவளே ஒரு தேவதைதானோ என்றுகூட அவளுடைய கணவன் ஐயுறுவதுண்டு. அவள் தேவதையானாலும் நல்ல தேவதை என்பது அவன் எண்ணம்.

ஊனாக்குக்கு ஒரு சகோதரி இருந்தாள். அவள் பெயர் **கிரானுவா.** அவள் எதிர்ப்புறமிருந்த குல்லமோர் மலையின் உச்சியில் குடியிருந்து வந்தாள். இந்த மலையைப்பற்றி முன்னரே கூறப்பட்டிருக்கிறது. நாக்மேனிக் குன்றுக்கும் அதற்கும் இடையிலுள்ள அழகான பள்ளத்தாக்கு சுமார் மூன்று அல்லது நான்கு மைல் நீளம் இருக்கும். ஊனாக்கும் அவள் சகோதரியும் தங்கள் மலைகளின் உச்சியிலிருந்து பேசிக்கொள்வது வழக்கம்.

இந்தச் சமயத்திலும் ஊனாக், சகோதரியின் பெயரைச் சொல்லிக் கூவினாள். கிரானுவா தான் அடிவாரத்தில் கனிகள் பறித்துக்கொண்டிருப்பதாகக் கூறினாள். உடனே அவளை மலை உச்சியில் ஏறும்படி ஊனாக் வேண்டினாள். அந்தப்படியே அவளும் ஏறி நின்றாள்.

"அக்காள்! சுற்றிலும் பார்த்து உன் கண்ணுக்கு ஏதாவது புலப்படுகிறதா என்று சொல்லு!" என்று கேட்டாள், ஊனாக்.

"அட, பாவமே! மிகப்பெரிய அசுரன் ஒருவன் அல்லவா டங்கன்னாலிருந்து வருகிறான்!" என்றாள், கிரானுவா.

"அதுதான் விஷயம்! அந்த அசுரன்தான் குகுல்லின்! அவன் என் கணவன் மக்கௌளலின் உடலைப் பதம் பார்க்க வருகிறான். நாம் என்ன செய்யலாம்?"

"நான் அவனைக் குல்லமோருக்கு அழைத்து இங்கே சிறிது நேரம் தங்கும்படி செய்கிறேன். அதற்குள் நீங்கள் வேண்டும் யோசனை செய்து திட்டம் தயாரியுங்கள்! என்னால் முடிந்தவரை நான் அந்த அசுரனைக் கவனித்துக் கொள்கிறேன்."

பிறகு அவள் மலையின் உச்சியில் பெருந்தீயை வளர்த்துப் புகை உயரே கிளம்பிச் செல்லும்படி செய்தாள். அங்கிருந்துகொண்டே வாயால் மூன்று முறை சீட்டியடித்தாள். அந்த ஒலியைக் கேட்டு குகுல்லின் தன்னைக் குல்லமோருக்கு யாரோ அழைப்பதாகத் தெரிந்து கொண்டான். பழங்காலத்தில் விருந்தினர் வந்து தங்கலா மென்பதற்கு அடையாளமாக மூன்று முறை சீழ்க்கை யடிப்பது வழக்கம்.

இடையில் மக்கௌளல் என்ன செய்வதென்று தெரியாமல் மிகவும் கவலையடைந்தான். அவன் வீரன்தான். ஆனால், அசுரனுக்கு எதிராக அவனுடைய வீரமும் பலமும் என்ன செய்ய முடியும்? பூகம்பமுண்டாக்கி, இடியை எட்டிப் பிடித்து நிறுத்துபவனை மற்போரில் எப்படித் தோற்கடிக்க முடியும்? அவனை எப்படித் தாக்குவது என்பதும் தெரியவில்லை. ஆகவே, அவனை எதிர்த்து நிற்காமலே காரியத்தை முடிக்க வேண்டுமென்று மக்கௌளல் முடிவு செய்தான்.

அவன், மனைவியைப் பார்த்து, "ஊனாக், ஊனாக், நீதான் இதற்கு ஒரு வழி சொல்ல வேண்டும். உன்னுடைய கற்பனா சக்தியெல்லாம் எங்கே போய்விட்டது? முயலை அடிப்பது போல அவன் உன் கண்முன்பே என்னை

அடித்துத் தள்ளிவிடுவானே! அவன் உடலே மலை போலிருக்கிறதே!" என்று சொன்னான்.

"நாதா, நீங்கள் நடுங்குவதைப் பார்த்தால் எனக்கு வெட்கமாயிருக்கிறது! நடுக்கமில்லாமல் நிலையாக நில்லுங்கள்! அவனுடைய இடி, பூகம்பம் எல்லாம் இங்கே என்னிடம் பலிக்காது. அவன் இதுவரை எங்குமே கண்டிராத சாப்பாடெல்லாம் கொடுத்து அவனை அனுப்பாவிட்டால் நான் ஊனாக்கில்லை! அவனை நான் பார்த்துக்கொள்கிறேன், நீங்கள் மட்டும் நான் சொல்கிறபடி நடந்தாற்போதும்!" என்று ஊனாக் அவனுக்கு ஆறுதல் சொன்னாள்.

இது போல் முன்பு எத்தனையோ ஆபத்தான சமயங்களில் அவள் அவனைக் காப்பாற்றியிருக்கிறாள். ஆகையால், அவன் அவளை முற்றிலும் நம்பினான். இப்பொழுது வந்துள்ள மாபெரும் ஆபத்தையும் கடப்பதற்கு, அவள் யுக்தி செய்து ஏதாவது தந்திரம் சொல்லுவாளென்று அவன் எண்ணியதில் வியப்பில்லை. எனவே, அவன் கவலை நீங்கி, சமைத்து வைத்திருந்த உணவை உண்டான்.

ஊனாக் ஒன்பது கம்பளி நூல்களை எடுத்து, மூன்று நூல்கள் கொண்ட மூன்று பிரிவுகளாகப் பிரித்து வைத்தாள். ஒவ்வொரு பிரிவிலும் நூல்கள் மூன்று வர்ணங்களில் இருந்தன. ஒவ்வொரு பிரிவையும் நன்றாக முறுக்கி மூன்று கயிறுகள் தயாரித்து, ஒன்றைத் தன் வலக்கையின் மணிக்கட்டிலும், ஒன்றை வலக்கால் கணுக்கட்டிலும், ஒன்றை மார்பில் இதயத்தைச் சுற்றியும் கட்டிக்கொண்டாள். அவள் முக்கியமான எந்த வேலையைத் தொடங்கினாலும், இப்படிச் செய்து கொள்வது வழக்கம். இப்படிக் காப்புகள் கட்டிக் கொண்டால்தான் அவள் எடுத்த காரியம் வெற்றியடையும்!

பிறகு, அவள் வெளியே சென்று, அக்கம்பக்கத்தில் தனக்குத் தெரிந்தவர்களிடமிருந்து இருபத்தோர் இரும்புத் தோசைக் கற்களை இரவலாக வாங்கி வந்தாள். வீட்டிலே ரொட்டிக்கு வேண்டிய மாவைப் பிசைந்து, ஒவ்வொரு ரொட்டிக்குள்ளும் ஒரு தோசைக் கல்லை வைத்து, அப்படி

இருபத்தொரு ரொட்டிகளைச் சுட்டு அடுக்கி வைத்தாள். அடுத்தாற்போல், இரண்டு பெரிய பானைகளில் தயிரும் மோரும் ஊற்றி வைத்தாள். குகுல்லின் வந்தால் தயிரை என்ன செய்யவேண்டுமென்று அவள் மக்கௌலுக்குச் சொல்லி வைத்தாள். வேலைகளை முடித்துவிட்டு அவள் நிம்மதியாக அமர்ந்திருந்தாள். மறுநாள் இரண்டு மணிக்குத்தான் விருந்தினன் வருவானென்று கணவன் சொல்லியிருந்ததால், அதுவரை அவள் பேசாமலிருந்தாள்.

மக்கௌல் வலக்கைக் கட்டைவிரலை அடிக்கடி கடித்துப் பார்த்துக்கொண்டான். அந்த விரலிலிருந்து அவனுக்கு எதிரி நிச்சயமாக எப்பொழுது வருவானென்பது தெரிந்துவிடும். மேலும், அவனுடைய வல்லமையெல்லாம் அந்த விரலைப் பொறுத்தே அமைந்திருந்தது. இதே போலக் குகுல்லினுக்கு முக்கியமான விரல் அவனுடைய வலக்கை நடுவிரல். எக்காரணத்திலாவது அந்த விரலுக்கு ஆபத்து நேர்ந்தால், பிறகு அந்தச் சிங்கத்தைச் சுண்டெலிகூட விரட்டியடிக்க முடியும். இந்த மர்மம் மக்கௌலுக்கும் தெரியும்.

மறுநாள் இரண்டு மணி அடித்ததும் குகுல்லின் பள்ளத்தாக்கில் ஏறி வந்துகொண்டிருந்தான். ஊனாக் உடனே தன் வேலைகளைத் தொடங்கிவிட்டாள். கூடத்திலே ஒரு பெரிய தொட்டிலை மாட்டினாள். மக்கௌலை அதில் ஏறிப் படுத்துக்கொள்ளச் சொன்னாள். இது அவனுக்கு மிகவும் கேவலமாகத் தோன்றியது. நாடு முழுதும் புகழ் பெற்ற மல்லனாகிய தான், கோழைத்தன மாகக் குழந்தை போல் தொட்டிலில் படுப்பதை அவன் விரும்பவில்லை. ஆனால், வேறு வழியுமில்லை. தேவியின் கட்டளைப்படி அவன் நடக்க வேண்டியிருந்தது. தொட்டிலில் அவன்மீது துணிகளை எடுத்துப்போட்டுப் போர்த்தினாள், ஊனாக்.

"இனி, நீங்கள் மக்கௌல் இல்லை, அவருடைய குழந்தை என்று எண்ணிக்கொண்டு நடிக்கவேண்டும். வாயை மூடிக்கொண்டு, நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நடக்கவேண்டும்!" என்று அவள் கூறினாள்.

உடனே குகுல்லின் வந்துவிட்டான். வீட்டினுள் நுழையும் போதே, "எல்லோரையும் கடவுள் காப்பாராக!

மாபெரும் மல்வீரன் மக்கெளலின் வீடு இதுதானே?" என்று அவன் கேட்டான்.

"இதுதான், இதுதான், பெரியவரே! ஆண்டவன் உமக்கு அருள் புரியட்டும்! இந்தப் பலகையிலே அமருங்கள்!"

"வந்தனம், அம்மா! நீதான் மக்கெளலின் மனைவியோ?"

"ஆமாம், என் கணவரால் எனக்கும் பெருமைதான்!"

"அது என்ன பெருமை! அயர்லாந்திலேயே மகாவல்லவன், மகாவீரன் என்று அவன் பெயர் பெற்றிருக்கிறான். ஆயினும், அவனையும் ஆட்டி வைக்கக்கூடிய வேறொருவன் இருக்கிறான்— அவன்தான் இப்பொழுது உங்களுடைய வீடு தேடி வந்திருக்கிறான்! உன் கணவன் வீட்டிலிருக்கிறானா?"

"அவர் இங்கில்லையே! யாரோ ஒருவன் வந்து, குகுல்லின் என்ற அசுர பயில்வான் அவரைத் தேடித் தாம்போதிக்கு வருவதாகச் சொன்னான். அவ்வளவுதான், ஒரே கோபத்துடன் வீட்டை விட்டு அந்தப் பயில்வானைத் தேடிப் போனவர் இன்னும் திரும்பி வரவில்லை. அவனை அவர் கண்டிருந்தால், இதற்குள் அவன் சட்டினியாகியிருப்பான்! கடவுள் அருளால் அசுரனை அவர் சந்திக்காமலிருக்க வேண்டும்!"

"அப்படியா! நான்தான் அந்தக் குகுல்லின்! நான் பன்னிரண்டு மாதங்களாக அவனைத் தேடிக்கொண்டு அலைகிறேன்; அவன் என் கையிலே சிக்காமல் எப்படியோ நழுவிப் போய்விடுகிறான். இரவிலோ பகலிலோ, எங்காவது அவனைப் பிடிக்காமல் விடமாட்டேன்!"

இதைக் கேட்டவுடன் ஊனாக், எள்ளி நகையாடி, உரக்கச் சிரித்துவிட்டு, அவனை அலட்சியமாகத் திரும்பிப் பார்த்தாள்.

உடனே, அவள் தன் தோற்றத்தை மாற்றிக்கொண்டு, "நீங்கள் எப்பொழுதாவது மக்கெளலைப் பார்த்திருக்கிறீர்களா?" என்று வினவினாள்.

"நான் எப்படிப் பார்க்கமுடியும்? நான் வந்தவுடனேயே அவன் எங்காவது கம்பியை நீட்டிவிடுகிறானே!"

"நானும் அப்படித்தான் எண்ணினேன்! நீங்கள் அவரைப் பார்க்காமலிருப்பதே நலம். இரவும் பகலும் ஆண்டவனைப் பிரார்த்தனை செய்துகொண்டேயிருங்கள் - அவரைச் சந்திக்காமலிருக்க வேண்டுமென்று. என்றாவது சந்திக்க நேர்ந்தால், அந்த நாள் உங்களுக்கு நல்ல நாளாக இராது. அது கிடக்கட்டும். இப்பொழுது காற்று வீட்டினுள் பலமாக வீசுகிறதே! அவர் இருந்தால், இந்த வீட்டைக் காற்றில்லாத பக்கம் திருப்பி வைத்துவிடுவார். இப்பொழுது விருந்தாளியை வேலை வாங்க வேண்டியிருக்கிறது. நீங்கள் வீட்டைச் சற்றே திருப்பி வையுங்களேன்!"

வீடு மரக்கட்டைகளால் அமைக்கப்பெற்றதுதான். ஆயினும், வீட்டையே திருப்ப வேண்டும் என்றதும் குகுல்லினுக்கே அச்சம் தோன்றியது. அவன் எழுந்திருந்து, தன் வலக்கை நடுவிரலை மூன்று முறை சொடக்கிட்டுச் சரிப்படுத்திக்கொண்டு, வெளியே சென்று, வீட்டின் அடிப்பகுதியில் கைகளை வைத்து அதைத் திருப்பி வைத்தான். தொட்டிலிலே கிடந்த மக்கௌல் வீடு ஆடியதைக் கண்டு திகிலடைந்தான். அவன் உடல் முழுதும் வியர்வையால் நனைந்துவிட்டது. ஆனால், அவனுடைய மனைவி, சிறிதும் துளங்காமல், பெண்மைக்குரிய தன் கூரிய புத்தியை நம்பிக்கொண்டிருந்தாள்.

குகுல்லின் உள்ளே வந்ததும் அவள், "நீங்கள் நல்ல உபகாரியாயிருக்கிறீர்கள். இன்னும் ஒரு சிறு வேலை இருக்கிறது. இங்கே தண்ணீர் இல்லை. அவர் இங்கிருக்கும் பொழுதே அருகிலுள்ள பாறையைப் பெயர்த்து நீர் எடுத்துத் தருவதாகச் சொன்னார். அதற்குள் தாம்போதியை நோக்கிப் போய்விட்டாரே! தாங்கள் கொஞ்சம் சிரமத்தைப் பாராமல் வந்து பாறையைப் பெயர்க்க முடியுமோ?" என்று விநயமாகக் கேட்டாள்.

அவனை அழைத்துக்கொண்டு வெளியே சென்று, மாபெரும் பாறை ஒன்றை அவள் அவனிடம் காட்டினாள். அவன் சிறிது நேரம் அதையே பார்த்துக்கொண்டிருந்து விட்டுத் தன் நடுவிரலைச் சொடக்கிடத் தொடங்கினான். ஒன்பது முறை சொடக்குப் போட்ட பின்பு, மெதுவாகச் சென்று, பாறையில் கைகளை வைத்து அழுத்தினான்; சிறிது நேரத்திற்குள் பாறையை அடியோடு பெயர்த்தெடுத்து

வெளியே வைத்தான். அதன் உயரம் 400 அடி, நீளமும் அகலமும் 1320 அடி இருக்கும்! இதைக் கண்டு ஊனாக்கே திடுக்கிட்டாள். இருந்தாலும் பெண்களின் உறுதியாலும் சாதுரியத்தாலும் எதைத்தான் சாதிக்க முடியாது?

"சரி, இனித் தாங்கள் உள்ளே வந்து சற்றுப் பசியாறிக் கொள்ளுங்கள்! ஏதோ எங்களுக்குரிய அற்பமான உணவைத் தங்களுக்கும் அளிக்கிறேன். என் கணவர் இருந்திருந்தால், நீங்கள் இருவரும் எதிரிகளாயிருந்த போதிலும், உங்களை உபசரிக்காமல் அனுப்பச் சம்மதிப்பாரா? அவர் இல்லாவிட்டால் என்ன? அவர் கடமையை நான் செய்கிறேன்!" என்று சொல்லி, அவனை உள்ளே அழைத்துச் சென்றாள்.

அவள் முன்பே தயாரித்து வைத்திருந்த இருபத்தொரு பெரிய ரொட்டிகளுள் ஆறும், இரண்டு மூன்று அடுக்குகளில் வெண்ணெயும், ஏராளமான இறைச்சியும், கீரையும் கொண்டுவந்து அவன் முன்பு வைத்து, அமுது செய்யும்படி வேண்டினாள். குகுல்லின் சாப்பாட்டிலும் பெரிய வீரனானதால், உடனே உண்ணத் தொடங்கினான். முதலாவது ஒரு முழு ரொட்டியைத் தூக்கி அப்படியே வாய்க்குள் போட்டு மென்றான். அவன் ஒரு கடி கடித்தானோ இல்லையோ, ஏதோ விலங்கு ஊளையிடுவது போல் கத்தத் தொடங்கினான். "பாழாய்ப்போக! ஐயோ, போய்விட்டதே! இதென்ன இது? என் பற்களுள் இரண்டு தெறித்து விழுந்துவிட்டனவே! நீ கொடுத்த இந்த ரொட்டி என்ன ரொட்டி?" என்று அவன் உரக்கக் கூவினான்.

"என்ன விஷயம்?" என்று ஊனாக் அமைதியாகக் கேட்டாள்.

"விஷயமா? என் வாயிலுள்ள பற்களுள் முதல் தரமான இரண்டு பற்கள் உடைந்துவிட்டன!" என்று அவன் மீண்டும் ஆவேசத்துடன் கத்தினான்.

"என்ன இது! இதுதானே மக்கௌல் இங்கிருக்கும் பொழுது நாள்தோறும் உண்ணும் ரொட்டி! ஆனால், நான் உங்களிடம் சொல்ல மறந்துவிட்டேன். அவரைத் தவிர வேறு யாரும் இதை மென்று தின்ன முடியாது. அவரைப் போலவே, அதோ தொட்டிலில் படுத்திருக்கிறானே அவர் பிள்ளை அவனும் தின்பான்! நீங்களும் பெரிய

பயில்வானாயிற்றே - மக்கௌலையே எதிர்க்கத் துணிந்து வந்தவராயிற்றே - என்று அந்தக் கடினமான ரொட்டியை உங்களுக்கும் படைத்தேன். அந்த ரொட்டிகள் கிடக்கட்டும், இதைத் தின்று பாருங்கள். இது ஒருவேளை சற்று மென்மையாயிருக்கும் !'' என்று அவள் வேறொரு ரொட்டியை எடுத்து வந்து படைத்தாள்.

அசுரனுக்குப் பசி அதிகம். எதையாவது கொஞ்சம் புசிக்க வேண்டுமேயென்று அதை வாயிலிட்டுக் கடித்தான். உடனே முன்னைவிட இரண்டு மடங்கு உரத்த குரலில் "ஓ!ஓ!" என்று ஓலமிடத் தொடங்கினான். "இடிதான் விழவேண்டும்! உன் ரொட்டிகளை எல்லாம் எடுத்துக் கொண்டு போ ! இவைகளைத் தின்றால், இனி என் வாயில் ஒரு பல்கூட மிஞ்சியிராது, அடுத்த இரண்டு பற்களும் உடைந்துவிட்டனவே !" என்று அவன் கூவினான்.

"பெரியவரே ! உங்களால் ரொட்டியைத் தின்ன முடிய வில்லை என்றால், அதை மெதுவாய்ச் சொன்னாலென்ன? தொட்டிற்பிள்ளையை எழுப்பிவிடுவீர்கள் போலிருக் கிறதே ! அதோ விழித்துவிட்டானே !" என்று கவலைப் படுவது போல் பேசினாள், ஊனாக்.

மக்கௌல், தூங்கி விழிப்பது போல் பாவனை செய்து கொண்டு, தொட்டிலிலிருந்தபடியே குரல் கொடுத்து முனகினான். அது குகுல்லினுக்குக் குழந்தைக் குரலாகத் தோன்றவில்லை, குட்டி யானை பிளிறுவது போலிருந்தது. "அம்மா, பசிக்கிறது ! ஏதாவது கொடு" என்று மக்கௌல் கேட்டான். உடனே ஊனாக் ஓடிச்சென்று, தோசைக்கல் வைக்காத பெரிய ரொட்டி ஒன்றை எடுத்து வந்து, அவன் கையிலே கொடுத்தாள். அங்கே நடப்பவைகளையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்ததில் அவனுக்குப் பசி அதிகமா யிருந்தது. அதனால் கையிலிருந்த ரொட்டியை விரைவிலே கடித்துத் தின்றுவிட்டான், இதைக் கண்ட குகுல்லின் பிரமிப்படைந்தான். தன் பற்களுள் நான்கைப் பதம் பார்த்த ரொட்டியை மக்கௌலின் குழந்தை ஒரு நொடியில் காலி செய்துவிட்டதேயென்று அவன் வியப்புற்று, மல்லன் மக்கௌலைத் தான் சந்திக்காமற்போனதே நல்லதென்று எண்ணினான். 'இந்த மாதிரி ரொட்டியைத் தின்னும் மனிதனையே. நான் இதுவரை பார்த்ததில்லை; இங்கே தொட்டிலிலே கிடக்கும் குழந்தை என் கண்ணெதிரிலேயே

அதை மென்று தின்று தீர்த்துவிட்டதே!' என்று அவன் தனக்குள்ளே சொல்லிக்கொண்டான்.

"இந்த அற்புதக் குழந்தையின் முகத்தை நான் பார்க்க விரும்புகிறேன். இத்தகைய உணவை உண்ணும் பையன் சாதாரணமானவன் அல்லன்!" என்றான், குகுல்லின்.

"நீங்கள் குழந்தையைப் பார்க்க நான் கொடுத்து வைத்தவள்தான்! வந்து பாருங்களேன்!... பாப்பா, இங்கே ஒரு சின்ன மனிதர் வந்திருக்கிறார். அவரிடம் நீ யார் மகன் என்பதைக் கொஞ்சம் காட்டு, பாப்பா!" என்று ஊனாக் கூறினாள்.

மக்கௌல் குழந்தையைப் போல் அலங்கரிக்கப் பெற்றிருந்தானல்லவா? குழந்தையைப் போலவே அவன் உடலை வளைத்துக்கொண்டு எழுந்திருந்து, அமர்ந்து, "உனக்குப் பலம் இருக்கிறதா?" என்று குகுல்லினைப் பார்த்துக் கேட்டான்.

"இதென்னடா அதிசயம்! சின்னக் குழந்தையா இப்படி உறுமுவது போல் பேசுகிறது!" என்று குகுல்லின் கூறினான்.

மக்கௌல் மறுபடி, "உனக்குப் பலம் இருக்கிறதா? இருந்தால், இந்தச் சிறு வெள்ளைக் கல்லைப் பிழிந்து தண்ணீர் எடுக்கவேண்டும்!" என்று சொல்லி, ஒரு கல்லை அவனிடம் கொடுத்தான்.

குகுல்லின் கல்லைக் கைகளுக்கிடையில் வைத்துக் கொண்டு பன்முறை அமுக்கியும் நசுக்கியும் பார்த்தான். அவன் படுகிற பாடுகளைக் கண்டு தொட்டிற்பயில்வான் ஏளனமாக நகையாடிக்கொண்டிருந்தான். குகுல்லின் கல்லைப் பிசைய முயன்று முயன்று கைகளைப் புண்ணாக்கிக்கொண்டதைத் தவிர வேறு பயனில்லை. அவன் முகம் கறுத்துவிட்டது.

"இவ்வளவுதானா உனது வல்லமை! நீயா பெரிய அசுரன்? அந்தக் கல்லை என்னிடம் கொடு, மக்கௌலின் மகன் என்ன செய்ய முடியுமென்று காட்டுகிறேன்!"

மக்கௌல் கல்லை வாங்கிக்கொண்டான்; கண்மூடித் திறப்பதற்குள் அதை மாற்றி, அதற்குப் பதிலாகத் தான் தயாராக வைத்திருந்த தயிர்க்கட்டியைக் கைக்குள் வைத்துக் கொண்டு பிழிந்தான். உடனே கல்லிலிருந்து நீர் வழிந்து

விட்டது ! "இந்தக் கல்லை நசுக்க முடியாத உன்னை, அப்பா வந்தால், ஒரு நிமிடத்தில் பச்சடியாக்கிவிடுவார் !" என்று சொல்லிவிட்டு, அவன் மீண்டும் தொட்டிலில் படுத்துக் கொண்டான்.

குகுல்லினும் அப்படியே எண்ணினான். மக்கௌலை எண்ணியதும் அவன் கால்கள் நடுங்கத் தொடங்கின. விரைவிலே ஊனாக்கிடம் விடை பெற்றுக்கொண்டு, அந்த இடத்தை விட்டு அகல்வதே நலமென்று அவன் தீர்மானித்தான். "நான் மக்கௌலுக்கு ஈடானவனல்லன் ! இனி அவனுடன் பொருதும் ஆசையும் எனக்கில்லை. இனி என் ஆயுட்காலத்தில் இந்தப் பகுதிக்கே வரமாட்டேன் என்பதை உன் க்ணவனிடம் சொல்லிவிடு !" என்று அவன் ஊனாக்கிடம் கூறினான்.

தங்கள் தந்திரங்களையெல்லாம் கண்டுகொள்ளாமல் அந்த அசுரன் வெளியேறப்போவதை எண்ணி மகிழ்ந்து கொண்டே மக்கௌல் தொட்டிலில் மௌனமாகப் படுத்திருந்தான்.

"ஏதோ நீங்கள் வந்த சமயம் அவர் வீட்டிலில்லாமற் போனதும் நல்லதுதான் !" என்றாள், ஊனாக்.

"ஆம், நல்லதுதான் ! ஆனால், நான் புறப்பட்டுப் போகு முன்னால், இந்தத் தோசைக்கல்-ரொட்டியைத் தின்னக்கூடிய உன் குழந்தையின் பற்களை ஒருமுறை பார்க்கத் தோன்றுகின்றது !" என்று அவன் கூறினான்.

"அதற்கென்ன, பாருங்கள் ! அவன் பற்கள் வாய்க்குள் தள்ளி இருப்பதால் விரலை ஆழமாக வைத்துப் பார்த்தால் தான் தெரியும் !" என்றாள், ஊனாக்.

குகுல்லின் குழந்தையின் வாய்க்குள் கையை வைத்துப் பார்த்தான். குழந்தையின் பற்கள் அப்படி வரிசையாகவும் உறுதியாகவும் இருக்குமா என்று வியந்துகொண்டே அவன் கையை வெளியே எடுத்தான். இடையில் பற்களைவிட வியப்பான ஒரு வேலை நடந்துவிட்டது. அவனுடைய நடு விரலைக் காணவில்லை ! அந்த விரல்தான் அவனுக்கு உயிர்நாடி போன்றது. அந்த விரலைத்தான் குழந்தை கடித்துத் துண்டித்துவிட்டது.

உடனே குகுல்லின் வேதனையால் குமுறிக்கொண்டே தரையில் சாய்ந்தான்.

கொடிய பகைவன் தொலைந்துவிட்டான் என்ற மகிழ்ச்சியுடன் மக்கெளல் தொட்டிலை விட்டுக் கீழே குதித்தான். சில நிமிடங்களுக்குப்பின் குகுல்லின் பிணமாகி விட்டான்.

இவ்வாறு, உடல் வலிமையால் வெல்ல முடியாத பகைவனை மக்கெளல் தன் மனைவியின் அறிவைக் கொண்டு வென்றுவிட்டான். பொதுவாகப் பெண்கள் பல சமயங்களில் சங்கடமான நிலையில் ஆடவர்களைக் கொண்டுபோய் மாட்டிவைத்த போதிலும், சில சமயங்களில் அவர்களே அத்தகைய நிலையிலிருந்து விடுதலை பெறவும் உதவுகிறார்கள் என்பதும் இதிலிருந்து தெரிகின்றது.

## 5. பாதிரியாரின் ஆன்மா

பண்டைக் காலத்தில் அயர்லாந்திலே பல பெரிய கல்விச் சாலைகள் திகழ்ந்து வந்தன. அவைகளிலே கலைகள் பலவும் மக்களுக்குக் கற்பிக்கப்பெற்று வந்தன. அந்தக் காலத்தில் ஏழை மக்கள் பெற்றிருந்த கல்வியின் அளவு இக்காலத்துப் பிரபுக்களுடைய கல்வியைப்பார்க்கினும் அதிகமென்று சொல்லலாம். பாதிரிமார்களின் படிப்போ எல்லாவற்றிலும் மேற்போனது. ஆதலால், உலகெங்கும் அயர்லாந்தின் புகழ் பரவி, வெளிநாட்டு அரசர்கள் பலர் தங்கள் குமாரர்களை அயர்லாந்துக்கு அனுப்பி, அங்குள்ள பள்ளிகளில் பயின்று வரும்படி செய்தனர்.

ஒரு சமயம் ஏழைச் சிறுவன் ஒருவன் ஒரு பள்ளியில் படித்து வந்தான். அவனுடைய புத்திக்கூர்மையைக் கண்டு எல்லோரும் வியந்தனர். அவனுடைய பெற்றோர்கள் உழைப்பாளிகள், ஏழைகள். ஆயினும், பணக்காரர்களுடைய பிள்ளைகள், அரச குமாரர்கள் எவரும் கல்வியில் அவனை எட்டிப் பிடிக்க முடியவில்லை. அவனுக்குக் கல்வி புகட்டிய ஆசிரியர்கள்கூட அவனிடம் எச்சரிக்கையாக இருக்க நேர்ந்தது; அவர்கள் அவனுக்கு எதையாவது கற்பித்துக் கொண்டிருக்கும் பொழுது, அவன் அவர்களே கேட்டிராத அரிய பெரிய விஷயம் ஒன்றைச் சொல்லுவான். வகுப்பிலே அவர்கள் வெட்கமடையும்படி நேரிடும். அவனுடைய வெற்றி முறைகளுள் ஒன்று, விவாதம். அவனிடம் யார் தருக்கம் செய்தாலும் அவன்தான் வெற்றியடைவான். கறுப்பை வெள்ளையென்று நிரூபிக்கும்வரை அவன் விவாதத்தை விடமாட்டான். 'சரி, வெள்ளைதான்!' என்று ஒருவர் ஒப்புக்கொண்டாலும், அவன் தன் வாதத்தை மாற்றி, 'வெள்ளையில்லை கறுப்புத்தான்!' என்று நிலைநாட்டுவான் அல்லது உலகில் வர்ணங்களே இல்லை என்று காட்டுவான்.

அவன் பெரியவனாக வளர்ந்ததும், அவனுடைய பெற்றோர்கள் அவனைப்பற்றி மிகவும் பெருமை கொண்டு, அவனைப் பாதிரியாராகத் தகுதி பெறும்படி சமயக் கல்லூரி

யில் சேர்த்தார்கள். அவனுடைய செலவுக்காக அவர்கள் தங்கள் வாயையும் வயிற்றையும் கட்டிக்கொண்டு மிகுந்த சிரமப்பட்டார்கள். அவனைப் போன்ற கல்விமான் அயர்லாந்திலேயே இல்லை என்னும் அளவுக்கு அவன் பெயர் வாங்கினான். அப்பொழுதும் விவாதத்தில் அவன் சளைப்பதில்ல, அவனை வெல்வோருமில்லை. பெரிய பிஷப்புகள்கூட அவனிடம் பேசினால், உடனே அவன் அவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்று எடுத்துக் காட்டி விடுவான். கல்வி முடிந்து அவனும் பாதிரிப்பட்டம் பெற்றான்.

அக்காலத்திலே பள்ளிகளில் ஆசிரியர்கள் என்று தனியாக நியமிப்பதில்லை, பாதிரிமார்களே கல்விச் சாலைகளை நடத்தி வந்தனர். எனவே, நமது ஏழைப் பாதிரியாரிடமும் பல மாணவர்கள் படிக்க வந்தார்கள். அவரே நாட்டில் தலைசிறந்த அறிவாளியென்று புகழ் பெற்றிருந்ததால், வெளிநாடுகளிலிருந்த அரசர்கள் பலர் தங்கள் பிள்ளைகளை அவரிடமே அனுப்பி வைத்தார்கள். பள்ளிக்கூடம் கொள்ளும் அளவுக்குப் பிள்ளைகள் சேர்ந்து பயின்று வந்தனர். இதனால் அவருக்குச் செருக்கு அதிகமாகிவிட்டது. அவர் எவ்வளவு தாழ்ந்த நிலையி லிருந்தார் என்பதையே அவர் மறக்கத் தொடங்கினார். எல்லாவற்றிற்கும் மேலாக எந்தக் கடவுள் அவரை இவ்வளவு உயர்ந்த நிலைக்குக் கொண்டுவந்தாரோ அந்தக் கடவுளையே மறக்கத் துணிந்துவிட்டார். விவாதத்திலே அவருக்கு இருந்த ஆர்வத்தினால், அவர் ஒவ்வொன்றாக மறுத்துவரத் தொடங்கி, கடைசியில் சுவர்க்கமும் கிடையாது, நரகமும் கிடையாது என்றும், பாப விமோசன ஸ்தானம் ஒன்றுமில்லையென்றும், கடவுளே இல்லை யென்றும், மனிதர்களுக்கு ஆன்மாக்கள் கிடையாதென்றும், அவர்கள் நாய் நரிகளைப் போன்றவர்களேயன்றி எதிலும் மேலானவர்களல்லரென்றும், அவர்கள் மரித்தால் அத்துடன் எல்லாம் முடிந்தது, மரணத்திற்குப்பின் எதுவுமில்லையென்றும் விவாதிக்க முன்வந்துவிட்டார். "ஆன்மாவைக் கண்டவன் எவன்? என்னிடம் காட்டினால் நம்புவேன்" என்று அவர் கூறுவார். இதற்கு யார் என்ன பதில் சொல்லமுடியும்? நாளடைவில் அவருடைய சீடர்கள் எல்லோரும் வேறு உலகமே கிடையாது, இந்த உலகில் யார் எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்ற

கொள்கைக்கு வந்துவிட்டனர். பாதிரியாரே அவர்களுக்கு வழிகாட்டி; வழிகாட்டவும் அவர் அஞ்சவில்லை. எவ்வாறெனில், நல்ல அழகான ஒரு பெண்ணைப் பார்த்து அவர் திருமணம் செய்துகொண்டார். விவாகத்தை நடத்திவைக்க நாட்டிலே ஒரு பாதிரியார்கூட முன்வர வில்லை. எனவே, அவரே வேத வாக்கியங்களைச் சொல்லி மணத்தை முடித்துக்கொண்டார். எங்கும் இதைப்பற்றி அபவாதம் ஏற்பட்டது. ஆனால், யாரும் வெளிப்படையாகப் பேசவோ, கண்டிக்கவோ முன்வரவில்லை. ஏனெனில், பாதிரியாரிடம் அரச குமாரர் பலர் படித்து வந்தார்கள் அல்லவா? அவர்கள் அவர் பக்கம் சேர்ந்துகொண் டிருந்தார்கள். எதிர்ப்பவர்களை அவர்களே அடித்து விடுவார்கள். ஒன்றுமறியாத பிள்ளைகளான அவர்கள் அவர் சொல்லும் ஒவ்வொரு சொல்லும் உண்மை யென்று நம்பி வந்தார்கள். இவ்வாறு அவர் கருத்துகள் எங்கும் பரவி வந்தன. உலகமே சீர் கெட்டுவிடுமோ என்றாகிவிட்டது.

அந்த நிலையில், ஓர் இரவில் தேவதூதர் ஒருவர் வந்து, பாதிரியாரிடம், பூவுலகில் அவர் வாழ்வு மேலும் இருபத்து நான்கு மணி நேரந்தான் என்று அறிவித்தார். உடனே பாதிரியாரின் உடலெல்லாம் நடுங்கத்தொடங்கிற்று. கூடுதலாகச் சிறிது காலம் உலகிலே தங்கியிருக்க அவர் அனுமதி கேட்டார்.

ஆனால், தேவதூதர் இடம் கொடுக்கவில்லை. "பாவியாகிய உமக்கு மேற்கொண்டு நேரம் எதற்கு?" என்று அவர் கேட்டார்.

"ஐயா, ஏழையாகிய என் ஆன்மாவுக்கு இரங்குங்கள்!" என்று பாதிரியார் மன்றாடினார்.

"முடியாது! ஆனால், உமக்கு ஓர் ஆன்மா இருக்கிறதா? அதை எப்படிக் கண்டுபிடித்தீர்?"

"நீங்கள் வந்ததிலிருந்து அது என்னுள்ளே சிறகடித்துக் கொண்டிருக்கின்றது. அதைப்பற்றி நான் முன்பே சிந்திக்காமலிருந்துவிட்டேனே! என்னைப் போன்ற அறிவிலி வேறு எவரேனும் உண்டோ?"

"ஆம், அறிவிலிதான்! நீர் கற்ற கல்வியெல்லாம் உமக்கு ஓர் ஆன்மா இருக்கிறது என்பதைக்கூட அறிவுறுத்தா விட்டால், அதனால் என்ன பயன்?"

"பிரபுவே! நான் இறக்கவேண்டியதுதான் என்றால், நான் எவ்வளவு சீக்கிரத்தில் சுவர்க்கம் போய்ச் சேருவேன் என்பதைச் சொல்லுங்கள்!"

"அங்கே உமக்கு இடம் கிடையாது. நீரோ சுவர்க்கமே இல்லை என்று கூறிவந்தவரல்லவா?"

"பாப விமோசன ஸ்தானத்திற்காவது நான் போக முடியுமா?"

"அப்படி ஒன்று இல்லையென்று நீர் சொல்ல வில்லையா? நீர் நேராக நரகத்திற்குத்தான் போவீர்!"

"ஆனால், பிரபுவே, நான் நரகமும் இல்லையென்று தானே சொல்லி வந்தேன்! அங்கு மட்டும் என்னை எப்படி அனுப்ப முடியும்?"

தேவதூதருக்குத் திகைப்பு உண்டாகிவிட்டது. அவர் கூறியதாவது: "சரி, உமக்காக நான் செய்யக்கூடியது இதுதான். நீர் உலகில் நூறு ஆண்டுகள் வாழ்ந்து, எல்லா இன்பங்களையும் நுகர்ந்து வரலாம். ஆனால், அதற்குப்பின் நீர் நிரந்தரமாக, யுகக்கணக்காக நரகத்திலேயே கிடக்கவேண்டும். அல்லது மிகவும் அவதிப்பட்டு இருபத்து நான்கு மணி நேரத்தில் நீர் மரணமடைந்து, இறைவனின் இறுதித் தீர்ப்பு நாள்வரை பாப விமோசன ஸ்தானத்தில் இருக்க வேண்டும்; ஆனால், இப்படி நடப்பதற்கு ஒரு நிபந்தனையுண்டு; உமக்காகப் பரிந்து பேசக்கூடிய - ஆண்டவனை நம்பும் ஓர் ஆஸ்திகனை நீர் குறிப்பிட வேண்டும். இந்த இரண்டு வழிகளே இருக்கின்றன. உமக்கு எது தேவை?"

பாதிரியார் யோசித்து முடிவு சொல்ல ஐந்து நிமிடங்கள்கூட ஆகவில்லை. "நான் இருபத்து நான்கு மணி நேரத்தில் இறந்துவிடத் தயார். என் ஆன்மா அதனால் ஈடேற்றமடையும்!" என்று அவர் சொன்னார். மேற்கொண்டு அவர் செய்ய வேண்டிய முறைகளைப்பற்றி விவரம் சொல்லிவிட்டுத் தேவதூதர் மறைந்து போனார்.

உடனே பாதிரியார், மாணவர்களும் அரச குமாரர்களும் அமர்ந்திருந்த அறைக்குள்ளே சென்று, எல்லோரையும் அழைத்துப் பேசத் தொடங்கினார்:

"இப்பொழுது உண்மையாகச் சொல்லுங்கள். நான் சொல்வதை மறுத்துப் பேசவேண்டியிருக்கிறதேயென்று யாரும் அஞ்ச வேண்டியதில்லை. மனிதர்களுக்கு ஆன்மாக்கள் உண்டா இல்லையா? இதைப்பற்றி உங்கள் நம்பிக்கை என்ன என்பதை என்னிடம் சொல்லுங்கள்."

"ஐயா, ஒரு காலத்தில் நாங்கள் மனிதர்களுக்கு ஆன்மாக்கள் இருந்தன என்று எண்ணியிருந்தோம்; ஆனால், நல்லவேளையாக தங்களுடைய போதனையால் நாங்கள் அந்த நம்பிக்கையை இழந்துவிட்டோம். நரகம் கிடையாது. சுவர்க்கம் கிடையாது. கடவுளும் கிடையாது. இதுதான் எங்கள் நம்பிக்கை. தாங்கள் சொல்லித்தந்ததும் இதுதான் !"

பாதிரியாருக்கு அச்சத்தால் முகம் வெளிறிப்போய் விட்டது. அவர், "இப்பொழுது கவனமாய்க் கேளுங்கள் ! நான் உங்களுக்குப் பொய்யைக் கற்பித்துவிட்டேன். கடவுள் இருக்கிறார். மனிதன் அழிவில்லாத ஆன்மாவைப் பெற்றிருக்கிறான். இதற்கு முன் நான் இல்லையென்று மறுதலித்தவை எல்லாம் உள்ளன என்று இப்பொழுது நம்புகிறேன் !" என்று உரத்த குரலில் கூவினார்.

அவர் தங்களை விவாதத்திற்குச் சோதனை செய்வதாக எண்ணி, அவர்கள் ஆரவாரம் செய்தனர்.

"ஆசிரியர் அவர்களே ! நீங்கள் சொன்னதை முதலில் நிரூபித்துக்காட்ட வேண்டும். கடவுளை எவர் கண்டிருக் கிறார், ஆன்மாவை எவர் பார்த்திருக்கிறார்?' என்று அவர்கள் வினவத் தொடங்கினார்கள்.

அறை முழுதும் அவர்கள் கும்மாளமடித்துக் கொண்டிருந்தார்கள். பாதிரியார் பதிலுரைக்க எழுந்த பின்பும், அவர் பேச்சை யாரும் கேட்க முடியவில்லை, அவ்வளவு சத்தம் ஏற்பட்டிருந்தது. வழக்கமான அவருடைய விவாதத் திறமை, சொற்பொழிவு செய்யும் ஆற்றல் எல்லாம் அவரிடமிருந்து போய்விட்டன. அவர் கைகளைப் பிசைந்து கொண்டு, "ஆண்டவர் ஒருவர் இருக்கிறார் ! ஆண்டவர் இருக்கிறார் ! கர்த்தரே, என் ஆன்மாவின்மீது கருணை காட்டுவீராக !" என்று கூவினார்.

அவர்கள் அனைவரும் அவரைப் பரிகாசம் செய்தனர்; அவர் சொல்லிக்கொடுத்த பாடத்தை அவரிடமே திருப்பிக் கூறத் தொடங்கினார்கள்.

"அவரை எங்களுக்குக் காட்டுங்கள்; உங்கள் ஆண்டவரை எங்களுக்குக் காட்டுங்கள்!"

மிகுந்த மனவேதனையுடன் ஓலமிட்டுக்கொண்டே அவர் அங்கிருந்து வெளியே ஓடிவிட்டார். ஆண்டவனை நம்பும் ஒருவருடைய உதவி தமக்கு உடனே கிடைக்கா விட்டால் தமது ஆன்மா நிரையத்துள் அழுந்த வேண்டி யிருக்குமே என்று அவர் கவலைப்பட்டார்.

வீட்டினுள்ளே சென்று அவர் தம் மனைவியிடம் கேட்டுப் பார்த்தார். அவள், "உங்கள் கொள்கைதான் என் கொள்கை. நீங்கள் சொல்லியதையே நான் நம்பிக் கொண்டிருப்பவள். இந்த உலகிலும் சுவர்க்க லோகத்திலும் எல்லாவற்றிலும் உயர்ந்தவர் கணவரே என்பதுதான் என் நம்பிக்கை!" என்று மறுமொழி கூறினாள்.

அந்த நிலையில் அவருடைய நம்பிக்கையெல்லாம் சிதறுண்டு போயிற்று. அவர் வீட்டை விட்டு வெளியே ஓடி, வழியிலே போவோர் வருவோரையெல்லாம் கேள்வி கேட்கத் தொடங்கினார். எல்லோரும் அவர் முன்பு சொல்லிக்கொடுத்த பாடத்தையே ஒப்பித்தனர்.

பயத்தால் அவர் அரைப் பயித்தியமாகிவிட்டார். நேரம் கழிந்துகொண்டேயிருந்தது. அவருடைய முடிவு காலமும் நெருங்கி வந்துகொண்டிருந்தது. அவர் ஏக்கத்தோடு, வழியிலே ஓர் ஒதுக்குப்புறத்தில், தரையிலே விழுந்து, அழுது, கதறி, முனகிக்கொண்டிருந்தார்.

அந்த நேரத்தில் இளஞ்சிறுவன் ஒருவன் அந்தப் பக்கமாக வந்தான். அவரைப் பார்த்ததும், அவன், "ஆண்டவன் உங்களுக்கு அருள்புரிவாராக!" என்றான்.

பாதிரியார் துள்ளியெழுந்தார்.

"நீ கடவுள் இருக்கிறாரென்று நம்புகிறாயா?" என்று அவர் கேட்டார்.

"அவரைப்பற்றிப் படித்துத் தெரிந்துகொள்ளத்தான் நான் வெளிநாட்டிலிருந்து இங்கே வந்திருக்கிறேன். இந்தப் பக்கத்திலேயுள்ள பள்ளிகளுள் சிறந்த பள்ளி ஒன்று எங்கே இருக்கிறதென்று தாங்கள் தயவுசெய்து தெரிவிக்க முடியுமா?" என்று கேட்டான், சிறுவன்.

"சிறந்த பள்ளியும் சிறந்த ஆசிரியரும் வெகு தொலைவி லில்லை - அருகிலேயே கண்டுகொள்ளலாம்!" என்று

அவர் கூறிவிட்டுத் தமது பெயரைச் சொல்லி, "அவரே அந்த ஆசிரியர் !" என்றும் தெரிவித்துக்கொண்டார்.

"அந்த ஆசிரியரிடம் போகக்கூடாது. அவர் கடவுளை மறுப்பவர் என்றும், சுவர்க்கம், நரகம் முதலியவற்றில் நம்பிக்கையற்றவர் என்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவருக்குக்கூட ஓர் ஆன்மா உண்டு. அவரை நான் கண்டால் அவரைச் சீக்கிரத்தில் நானே சரிப்படுத்தி விடுவேன் !"

பாதிரியார் ஆத்திரத்தோடு அவன் முகம் நோக்கி, "எப்படி?" என்று கேட்டார்.

"எப்படியா? அவருக்கு உயிர் இருக்கிறது என்று அவர் நம்பினால், அந்த உயிரைக் காட்டும்படி கேட்பேன் !"

"குழந்தாய், உயிரை எப்படிக் காட்ட முடியும்? உயிரைக் கண்ணால் பார்க்க முடியாது; ஆனால், அது இருப்பது உண்மை !"

"அப்படியானால், நம்மால் பார்க்க முடியாவிட்டாலும் நமக்கு உயிர் இருக்கிறது என்றால், நம் கண்ணுக்குப் புலனாகாவிட்டாலும் நமக்கு ஆன்மாவும் இருக்கக் கூடுமல்லவா?"

இந்த வார்த்தைகளை அவன் கூறியவுடன், பாதிரியார் அவன் முன்பு முழந்தாளிட்டுக்கொண்டு, ஆனந்தக்கண்ணீர் பெருக்கினார்; தமது ஆன்மா கடைத்தேறிவிடும் என்று அவர் மகிழ்ந்தார்; ஏனென்றால், கடவுள் நம்பிக்கையுள்ள ஒருவனை அவர் கண்டுவிட்டார் ! பிறகு, அவர் அக்குழந்தையிடம் தம் வரலாறு முழுவதையும் சொன்னார். தமது செருக்கு, தீவினை, தேவசிந்தனை முதலியவைகளையும், தேவதூதர் வந்ததையும், தமக்காக இறை நம்பிக்கை கொண்ட ஒருவர் பிரார்த்தனை செய்து ஆதரவு கொடுத்தால்தான் தாம் முக்தியடைய முடியும் என்று தேவதூதர் தெரிவித்ததையும் விளக்கமாகக் கூறினார்.

மேலும், அவர் கேட்டுக்கொண்டதாவது : "நீ எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். இதோ இருக்கும் எனது பேனாக்கத்தியைக்கொண்டு என் நெஞ்சிலே குத்த வேண்டும். நான் இறந்து விழும்பொழுது என் உடலிலிருந்து சோதிமயமான என் ஆன்மா சிறகடித்துக்கொண்டு வெளியேறி உயரே பறந்து செல்வதை நீ பார்த்ததும், நேராக என் பள்ளிக்குச் சென்று, என் மாணவர்களை அழைத்துவந்து அக்காட்சியைக் காட்டவும். அதன் மூலம்

நான் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்தனவெல்லாம் பொய்யென்றும், பாவத்திற்குத் தண்டனையளிக்கும் இறைவன் ஒருவன் உளன் என்றும், பேரின்பமும் நிரையமும் உண்டென்றும், மனிதன் அழிவில்லாத ஆன்மாவைப் பெற்றிருக்கிறானென்றும், அது நித்தியமான பேரின்பத் தையோ பெருந்துயரையோ அடைந்தே தீருமென்றும் நீ எடுத்துக்காட்டு!"

"எந்த உயிரையும் எவரும் மாய்த்துவிட முடியாது. அது இறைவன் ஒருவனால்தான் இயலும். இருபத்துநான்கு மணி நேரத்தில் உங்கள் ஆவி பிரியுமென்று தேவதூதர் சொன்னதாக நீங்களே தெரிவித்தீர்கள். அந்த நேரமும் நெருங்கிக்கொண்டிருக்கிறது. உங்களுக்காகப் பிரார்த்தனை செய்துகொண்டு நான் இங்கேயே தங்கியிருக்கிறேன்!" என்று சொல்லிப் பையன் தொழத் தொடங்கினான்.

சிறிது நேரத்தில் பாதிரியார் உடல் கடும் வேதனை களுக்குள்ளாயிற்று. அவர் கண்களை மூடிவிட்டார். அவருடைய ஆன்மா நான்கு வெள்ளைச் சிறகுகளுடன், அவர் உடலிலிருந்து மேலே பறந்து சென்றது. சிறுவன் ஓடிச்சென்று, மாணவர்களை அழைத்துவந்து அக் காட்சியைக் காட்டினான். அவர்கள் ஆச்சரியத்தோடும் அச்சத்தோடும் ஆசிரியரின் ஆன்மா மேக மண்டலத்தில் மறையும்வரை பார்த்துக்கொண்டே இருந்தனர். அந்த ஆன்மாதான் அயர்லாந்திலே காணப்பெற்ற முதலாவது வண்ணத்துப்பூச்சி. அதுமுதல் பாவ விமோசன ஸ்தானத் திற்கு இறைவன் அழைத்துக்கொள்ளும்வரை இறந்தவர் களின் ஆன்மாக்கள் வண்ணத்துப்பூச்சிகளாக உலகிலே உலவி வருவதாக மக்கள் நம்புகின்றனர்.

பாதிரியார் பரலோகம் சென்ற பின்பு, அயர்லாந்தில் பள்ளிக்கூடங்கள் சீர்குலைந்துவிட்டன; மாணவர்கள் பெருவாரியாக வெளியேறிவிட்டார்கள். வெளிநாடுகளில் உள்ளவர்களும் தங்கள் குழந்தைகளை அயர்லாந்துக்கு அனுப்புவதில்லை. அந்நாட்டின் தலைசிறந்த அறிவாளியே தமக்கு ஆன்மா ஒன்றுண்டு என்பதை அறியாமலிருந்து, கடைசியாக ஒரு சிறு பையனின் கருணையால் ஈடேற்றமடைந்தார் என்றால், அவ்வளவு தூரம் சென்று படிப்பது என்ன படிப்பென்று அவர்கள் சொல்லிக் கொண்டார்கள்.

## 6. காத்தான் சுமந்த பிணம்

**அ**யர்லாந்து நாட்டிலே, **லெய்த்திரிம்** தாலுகாவில், ஒரு கிராமத்தில் செல்வம் மிகுந்த குடியானவன் ஒருவன் இருந்தான். அவனுடைய மகன் **காத்தான்** என்பவன் இளைஞன்; உறுதியான உடல் படைத்தவன்; எப்பொழுதும் உற்சாகமாயிருக்க விரும்புபவன். அவன் கேட்ட பொழுதெல்லாம் தந்தை பணம் கொடுத்து வந்தான். அவனுக்கு வயது ஆக ஆக, அவன் வேலை செய்வதில் பிரியமில்லாமல், வேடிக்கையாகச் சுற்றித் திரிவதிலேயே காலம் கழித்து வந்தான். தந்தைக்கு அவன் ஒரே மகனாயிருந்ததால், அவன் பிரியம் போல் நடப்பதைத் தடுப்பார் எவருமிலர். பொற்காசுகளை அவன் தண்ணீர் போல் அள்ளிச் செலவிட்டு வந்தான். வீட்டிலே அவனைக் காண்பது அரிது; சுற்றிப் பத்து மைல் எல்லைக்குள் ஏதாவது சந்தை, பந்தய ஆட்டம், பொதுக்கூட்டம் முதலிய எது நடந்தாலும் அவனை அங்கே நிச்சயமாய்க் காணலாம். இரவு நேரங்களில் அவன் வீதிகளிலே சுற்றிக்கொண்டிருப்பான். பெண்களைக் கண்டுவிட்டால், அவர்கள் பின்னாலேயே ஓடுவான். அவன் அழகனாயும் இருந்ததால், பல பெண்கள் அவனைக் காதலித்தனர்.

அடக்குவாரில்லாததால் அவன் திமிர்கொண்டு திரிந்துகொண்டேயிருந்தான். இரவிலும் பகலிலும் அவன் தந்தையின் வீட்டில் தங்குவதேயில்லை. வீதிதோறும், வீடுதோறும் திரிந்துகொண்டிருந்த அவனைப் பார்த்தவர்கள், 'தந்தை மண்டையைப் போட்ட பிறகு, அவனுடைய நிலங்களையெல்லாம் இவன் ஒரே ஆண்டில் காலி செய்துவிடுவான். அவை ஒரு வருடங்கூட நிலைத்திருக்குமோ என்னவோ!' என்று பேசிக்கொள்வார்கள்.

நாளடைவில் சீட்டாட்டம், சூதாட்டம், மதுபானம் முதலியவைகளில் அவன் அதிகமாக ஈடுபடலானான். தந்தையோ அவனைக் கண்டிக்கவுமில்லை, தண்டிக்கவுமில்லை. ஒரு நாள் ஒரு குடியானவன் மகளிடம் காத்தான் தகாத முறையில் நடந்ததாக அவன் தந்தை கேள்விப்பட்டு,

அவனைத் தன் முன்பு அழைத்துப் பேசலானான் : "அப்பா மகனே! எப்பொழுதும் உன் கை நிறையச் செலவுக்குப் பணம் கொடுத்து வருகிறேன். இதுவரை உன்னை எதிலும் நான் தடை செய்யவில்லை. ஆனால், இப்பொழுது நான் கேள்விப்பட்ட செய்தியிலிருந்து எனக்கு மிகவும் அவமான மாயிருக்கிறது. நீ எந்தப் பெண்ணிடம் முறை தவறி நடந்தாயோ, அவளை உடனே நீயே திருமணம் செய்து கொள்ளவேண்டும். அப்படிச் செய்துகொண்டால்தான் என் நிலங்களையும், நாம் குடியிருக்கும் இந்த வீட்டையும் உன் பெயரில் எழுதி வைப்பேன். இல்லாவிட்டால் இவைகளையெல்லாம் என் தம்பி மகனுக்குக் கொடுத்து விடப்போகிறேன். நாளைக் காலையில் இதுபற்றி உன் கருத்தை என்னிடம் தெரிவிக்கவேண்டும்!"

"எவ்வளவோ நல்ல பிள்ளையாகிய என்னிடம் இப்படிப் பேசுகிறீர்களே! அந்தப் பெண்ணை நான் மணந்துகொள்ள மாட்டேனென்று உங்களிடம் எவன் சொன்னான்?" என்றான், மைந்தன்.

தந்தை உள்ளே சென்றுவிட்டார். அவர் பிடிவாத முள்ளவர் என்பதும், சொன்ன சொல்லை மாற்றமாட்டார் என்பதும் இளைஞனுக்குத் தெரியும். அவனுக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. அவனுக்கு அந்தப் பெண் மேரியிடம் இயற்கையிலேயே காதலுண்டு. இப்பொழுதோ, பின்னரோ, அவளை மணந்துகொள்வதில் அவனுக்கு ஆட்சேபமில்லை. ஆனால், அவனுடைய தந்தை இதற்காகக் கடிந்துகொண்டு கட்டளையிட வேண்டுமா? அவளை மணந்துகொள்ளாவிட்டால் சொத்தில் உரிமை இல்லை யென்று பயமுறுத்த வேண்டுமா? இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டு, அவன் மேலும் சிறிது காலம் சீட்டு, சூது, குடி ஆகியவற்றிலேயே பொழுதுபோக்க விரும்பினான். 'நானாகவே மேரியை மகிழ்ச்சியுடன் மணந்திருப்பேன். ஆனால், மூடத்தந்தை கட்டளையிட்டதால், திருமணத்தைப் பற்றிப் பின்னால்தான் கவனிக்கவேண்டும்!' என்று அவன் தனக்குள்ளே சொல்லிக்கொண்டான்.

அவன் மனம் குழப்பமடைந்திருந்தது. உதிரமும் கொதித்தது. தந்தை சொல்லுக்குக் கட்டுப்படுவதா, அதை மீறுவதா என்ற இரண்டனுள் ஒன்றை அவனால் முடிவு செய்ய இயலவில்லை. எனவே, அவன் குளிர்ந்த காற்று

வீசும் இடத்திலே சிறிது நேரம் நடந்துகொண்டிருக்க எண்ணிச் சாலை வழியாகச் சென்றான். அவன் கால்கள் வேகமாக நடக்கத் தொடங்கின. அந்த வேகத்தினால் மூளையின் கொதிப்பும் சற்றே குறைவது போல் அவனுக்குத் தோன்றிற்று. எனவே, அவன் விடாமல் நடந்துகொண்டே இருந்தான். வானத்தில் வளர்மதியின் நிலவு ஓரளவு வழி காட்டிக்கொண்டிருந்தது. ஈரவாடை. சுற்றிலும் ஒரே அமைதி. அவன் தன்னந்தனியே நடந்து வெகுதூரம் சென்றுவிட்டான். அவன் புறப்பட்டு மூன்று மணி நேரம் கழிந்துவிட்டது. திடீரென்று அவன், 'அடடா! என்னையே மறந்து நெடுந்தூரம் வந்துவிட்டேனே! மணி பன்னிரண்டு ஆகியிருக்கும்!' என்று சொல்லிக்கொண்டான்.

அவன் சொல்லி வாய் மூடியதும், பல குரல்கள் ஒலிப்பதையும், அநேகர் நடந்து வரும் காலோசையையும் அவன் கேட்டான். 'இந்த ஏகாந்தமான சாலையில், இந்த நடுநிசியில் எவர்கள் இப்படி வருகிறார்கள்?' என்று அவன் எண்ணமிட்டான்.

அவனுக்கு எதிர்ப்பக்கத்தில் பலர் கூடிப் பேசிக் கொண்டு வருவதை அவன் உணர்ந்தான். அவர்கள் பேசிய மொழி ஐரிஷ் மொழியுமில்லை, ஆங்கிலமுமில்லை. ஒருவேளை ஃபிரெஞ்சு மொழியாயிருக்கலாமென்றால், அதுவுமில்லை. அவன் முன்னால் சில அடிகள் எடுத்து வைத்து நகர்ந்தான். நிலவொளியில் குள்ளமான பல உருவங்கள் தென்பட்டன. அவை அதிகக் கனமான எதையோ சுமந்து வந்துகொண்டிருந்தன.

'ஓ, ஏதோ கொலைதான் நடந்திருக்கிறது! என்னையும் விடமாட்டார்கள்! இவர்கள் நல்லவர்களல்லர்! ஏதோ துர்தேவதைகளாகவே இருக்கவேண்டும்!' என்று அவன் முணுமுணுத்துக்கொண்டான். அவன் தலையிலிருந்த உரோமங்களில் ஒவ்வொன்றும் எழுத்தாணிபோல் நட்டமாக எழுந்து நின்றன. அவன் உடலினுள்ளே எலும்புகள் யாவும் குலுங்கின. அவர்கள் வேகமாக அவனை நோக்கியே வந்துகொண்டிருந்தார்கள்.

அவன் மீண்டும் அவர்களை உற்றுப்பார்த்தான்; சுமார் இருபது பேர் இருந்தனர்; எல்லோரும் குள்ளமான மனிதர்கள்; அவர்களுள் மூன்று அல்லது மூன்றரை அடிக்குமேல் உயரமுள்ளவரே இலர். சிலர் சாம்பல்

நிறமாகவும், மிகவும் வயதானவர்களாகவும் காணப் பட்டனர். அவர்கள் எதைத் தூக்கி வந்தார்கள் என்பது தெரியவில்லை. அவன் மீண்டும் உற்று நோக்கினான். அதற்குள் அவர்கள் அனைவரும் அவனைச் சுற்றி வளையமிட்டுக்கொண்டனர். அவர்கள் சுமந்துகொண்டு வந்த பொருளைச் சாலையிலே போட்டார்கள். அவன் மறுபடி அதைப் பார்த்து, அது ஒரு பிணம் என்று தெரிந்து கொண்டான்.

கிழட்டுக் குள்ளன் ஒருவன் அவனிடம் நெருங்கி வந்து, "என்ன, காத்தான்! உன்னை நாங்கள் சந்தித்தது பெரிய அதிர்ஷ்டமல்லவா?" என்று கீச்சுக் குரலில் கேட்டான். அந்தக் கணத்திலேயே காத்தானுடைய உடல் சில்லிட்டுப் போயிற்று, நரம்புகளில் உதிரம் உறைந்து போய்விட்டது.

ஏழைக் காத்தான் வாயைத் திறக்க முடியாமல் திணறினான்; அவன் வாயும் இறுக்கமாக மூடியிருந்தது. ஆகவே, அவன் பதில் சொல்ல முடியவில்லை.

"ஏ காத்தான்! நாங்கள் சரியான சமயத்தில்தானே உன்னைச் சந்தித்திருக்கிறோம்?" என்று கிழவன் மீண்டும் கேட்டான்.

காத்தான் வாயைத் திறக்கவில்லை.

"என்ன, காத்தான்! மூன்றாவது தடவையாகக் கேட்கிறேன்: நாங்கள் சரியான சமயத்தில் உன்னைச் சந்தித்தது அதிர்ஷ்டந்தானே?"

காத்தான் இதற்கு என்ன மறுமொழி சொல்வதென்று தெரியாமல் திகைத்தான். மேலும், அவன் நாக்கு வாயின் மேல் முகட்டில் ஒட்டிக்கொண்டு அசையவே மறுத்தது.

குள்ளக்கிழவன் மகிழ்ச்சியடைந்து தன் நண்பர்களைப் பார்த்து, "காத்தானோ பதிலே பேசவில்லை. இனி நாம் அவனை நம் விருப்பம் போல் பயன்படுத்திக்கொள்ளலாம்!" என்று சொன்னான். அவன் காத்தானை நோக்கி, "காத்தான், நீ தீயொழுக்கமுள்ளவன். உன்னை நாங்கள் இப்பொழுது அடிமையாக்கிக்கொள்வோம். உன்னால் எங்களை எதிர்த்து நிற்கவும் முடியாது! இதோ இந்தப் பிணத்தைத் தூக்கு!" என்றான்.

காத்தான் நடுங்கிப்போயிருந்த நிலையில், "முடியாது!" என்று ஒரே வார்த்தை கூறினான். அவனுடைய பழைய செருக்கும் உறுதியும் அந்த ஒரு சொல்லில் வெளிப்பட்டன.

கிழவன் குறும்புத்தனமாகச் சிரித்துக்கொண்டே, "நம்முடைய காத்தான் பிணம் தூக்குவானா? அவன் தூக்கவே மாட்டான்! அவனைத் தூக்கவையுங்கள்!" என்று கூறினான்.

உடனே குள்ளர்கள் அனைவரும் சிரித்து, ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு, காத்தானை நெருங்கி வந்தனர். அவன் ஓட முயன்றான். ஆனால், அவர்கள் சுற்றி நின்று தடுத்தார்கள். அவன் ஓடும்போதே ஒரு குள்ளன், காலை நீட்டி அவன் கால்களைத் தட்டிவிட்டான். காத்தான் தரையிலே குப்புற விழுந்தான். உடனே சில குள்ளர்கள் அவனுடைய கைகளைப் பிடித்துக்கொண்டார்கள். சிலர், கால்களைப் பற்றி அமுக்கிக்கொண்டார்கள். அவனால் எழுந்திருக்க முடியவில்லை; உடலை அசைக்கவே முடியவில்லை. ஏழெட்டுக் குள்ளர்கள் சாலையிலே கிடந்த பிணத்தைத் தூக்கி அவன் முதுகிலே சார்த்தினார்கள். பிணத்தின் மார்பு அவனுடைய முதுகுடன் சேரவும், அதன் கைகள் இரண்டும் அவனுடைய கழுத்தைச் சுற்றிப் பின்னிக்கொள்ளவும் செய்துவிட்டு, அவர்கள் சற்றுப் பின்னால் நகர்ந்து நின்று, அவனை எழுந்திருக்கும்படி செய்தார்கள். அவன், வாயிலிருந்து நுரை கக்கிக்கொண்டே எழுந்திருந்தான். அவன் ஒரே மூச்சில் முதுகிலிருந்த பிணத்தை உலுக்கிக் கீழே தள்ளிவிட முயன்றான். ஆனால், பிணம் அவனை விடவில்லை. அதன் கைகள் அவன் கழுத்தை இறுகப் பிணித்திருந்தன. அதன் கால்கள் அவன் இடுப்பைச் சுற்றி அழுத்திக்கொண்டிருந்தன. இந்த நிலையில் அவன் ஆச்சரியமடைந்து பயந்து நடுங்கினான். அவன் எவ்வளவு பலமாக முயன்றும் அந்தச் சடலத்தை அசைக்க முடியவில்லை. அது அவன் முதுகுடன் ஒட்டிக்கொண்டிருந்தது. இனிமேல் தனக்குக் கதியில்லையென்றும், இத்துடன் தன் வாழ்வு முடிந்துவிடுமென்றும் அவன் அஞ்சினான். பிறகு, 'என்னுடைய தீய வாழ்க்கையே இந்த நல்ல தேவதைகளை என்னைப் பழி வாங்கும்படி செய்திருக்கிறது. ஆண்டவன்மீது சத்தியமாகச் சொல்கிறேன், மேரி அன்னை சத்தியமாகவும், பீட்டர், பவுல், பாட்ரிக், பிரிட்ஜெட் முதலிய ஞான முனிவர்கள் சத்தியமாகவும் சொல்கிறேன் - இனி நான் என் வாழ்நாள் முழுதும் நேர்மையாக வாழ்கிறேன். இந்த ஆபத்திலிருந்து நான் தப்பிவிட்டால்,

நான் மேரியையே மணந்துகொள்கிறேன்!' என்று அவன் சொல்லிக்கொண்டான்.

குள்ளக் கிழவன் மீண்டும் அவனண்டையில் வந்து, "நான் தூக்கச் சொன்னவுடன் நீ பிணத்தைத் தூக்கவில்லை. ஆனால், இப்பொழுது நீதான் அதைச் சுமந்து நிற்கிறாய். இனி அதைக் கொண்டுபோய்ப் புதைக்க வேண்டும்; அதையும் நீயாகச் செய்ய மாட்டாயல்லவா? அதையும் நீ செய்யும்படி நாங்களே செய்ய வேண்டுமோ?" என்று கேட்டான்.

"மேன்மை தங்கியவரே, உங்களுக்காக என்னாலியன்றவற்றையெல்லாம் செய்கிறேன்!" என்றான், காத்தான். அவனுக்குப் புத்தி தெளிந்துவிட்டது. பயத்தினால் மரியாதையுள்ள சொற்கள் தாமாகவே அவன் வாயிலிருந்து வெளிவந்துவிட்டன.

மீண்டும் கிழவன் எள்ளி நகைத்தான். "இப்பொழுது அமைதியாக அடங்கிவிட்டாய். போகப்போக இன்னும் அமைதியடைந்துவிடுவாய்! காத்தான், இனி நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டு, அதன்படி செய்ய வேண்டும்! இல்லாவிட்டால், பின்னால் நீ மிகவும் வருந்த வேண்டியிருக்கும். நீ இந்தப் பிணத்தைத் தூக்கிக்கொண்டு முதலில் **டிம்போல்டேமஸ்** என்ற இடத்திலுள்ள இடுகாட்டிற்குப் போய், அங்கே தக்க இடம் பார்த்து இதைப் புதைக்க வேண்டும். குழி தோண்டி எடுத்த மண்ணில் மிஞ்சியதைக் கவனமாக வெளியே தூரத்தில் கொண்டு போய் நீயே கொட்ட வேண்டும்!" என்று அவன் உத்தரவிட்டான். அத்துடன், அவன் முதலிலே சொன்ன இடுகாட்டில் இடம் கிடைக்கவில்லையானால், வரிசையாக வேறு நான்கு ஊர்களின் பெயரைச் சொல்லி, அந்த இடங்களுள் ஒன்றில் புதைக்க வேண்டுமென்றும் தெரிவித்தான்.

அவனுடைய பேச்சு முடிந்தவுடன் எல்லாக் குள்ளர்களும் பலமாகச் சிரித்துக் கை கொட்டி ஆரவாரம் செய்தார்கள்; 'ஹோ! ஹோ! ஹூயீ! ஹூயீ!' என்று ஊளையிட்டார்கள். பிறகு, அவர்கள் அனைவரும் சேர்ந்து, "விடிவதற்கு இன்னும் எட்டு மணி நேரம் இருக்கிறது, அதற்குள் நீ இந்த மனித உடலைப் புதைத்துவிட வேண்டும், தவறினால் நீ பிழைக்கமாட்டாய்!" என்று எச்சரிக்கை

செய்தார்கள். அத்துடன் அவர்கள் பின்னால் இருந்து கொண்டு அவனைக் கைகளால் குத்தியும், கால்களால் எற்றியும், "ஓடு, ஓடு !" என்று விரட்டினார்கள்.

செக்கின் உலக்கை போல் கனமாயிருந்த சடலத்தை தூங்க முடியாமற் சுமந்துகொண்டே, அவர்கள் காட்டிய திசையை நோக்கிக் காத்தான் நடக்கலானான். அவனுக்கு அந்த ஊர்களும் தெரியாது, பாதையும் தெரியாது. எப்படியோ நிலவின் ஒளியைத் துணைக்கொண்டு அவன் நடந்து சென்றான். சந்திரனை மேகங்கள் மறைத்தபொழுது அவன் இருளிலே சில இடங்களில் தடுக்கி விழுந்து காயமடைந்தான். ஆனால், கீழே விழுந்த அவன், உடனே எழுந்திருந்து மீண்டும் நடக்கத் தொடங்கினான். அவனுக்குப் பின்னால் சிறிது தூரத்தில் குள்ளர்களும் தொடர்ந்து வந்துகொண்டிருந்தனர். வழியெல்லாம் அவர்களுடைய கூத்தும் கும்மாளமும் பேச்சும் பிதற்றலும் எல்லைமீறி யிருந்தன.

நெடுந்தூரம் நடந்து காத்தான் கடைசியாக டீம்போல்-டெமஸ் என்ற இடத்திலிருந்த மாதா கோயிலை அடைந்தான். அங்கே கோயிலுக்குப் பின்புறமுள்ள இடு காட்டிற்குப் போனான். வழியில் ஒரு திட்டிக் கதவு இருந்தது. அது பூட்டி வைக்கப்பட்டிருந்ததைக் கண்டு, அவன் சிறிது திகைத்து நின்றான். அப்பொழுது "போ, சாவியை எடுத்து வா ! கோயிலுக்குள் போய்ச் சாவியை எடுத்து வா !" என்று ஒரு குரல் ஒலித்தது. அவன் வியப்படைந்தான், சுற்றிச் சுற்றிப் பார்த்தான். ஒருவரையும் காணவில்லை. அவன் மெய் நடுங்கி, நெற்றியிலிருந்து வியர்வை வழிந்தது. "இது என்னது? என்னிடம் பேசியவர் யார்?" என்று அவன் கூவினான்.

"நான்தான், பிணம் பேசினேன் !" என்று குரல் ஒலித்தது.

"உன்னால் பேசவும் முடியுமா?" என்று கேட்டான், காத்தான்.

"சில சமயங்களில்....." என்றது, சடலம்.

"பிணத்திலும் பிணம், பேசும் பிணமாக வந்து அமைந்ததே !" என்று அவன் மேலும் நடுக்கமடைந்து, சாவியை எடுத்துவந்து, பூட்டைத் திறந்து, வேகமாக உள்ளே போனான். அங்கிருந்த மண்வெட்டி ஒன்றனால் இரண்டு

மூன்று இடங்களைத் தோண்டிப் பார்த்தான். அவன் தோண்டிய இடங்களிலிருந்து வேறு பிணங்கள் எழுந்து விட்டன! அன்றிரவு அவன் கண்ட காட்சிகளுள் அவையே மிகவும் கோரமானவை. அவன் குழிகளில் மீண்டும் மண்ணைக் கொட்டி மூடிவிட்டு இடுகாட்டை விட்டே வெளியேறினான்.

"அடுத்த ஊர் **கார்ரிக்**" என்றது, பிரேதம்.

காத்தான் தன் தலைவிதியை நொந்துகொண்டே நடந்தான். கிழவன் சொன்ன கார்ரிக் முதலிய மூன்று ஊர்களிலும் இடம் கிடைக்கவில்லை. கால்கள் தள்ளாடிக் கொண்டே ஐந்தாவது ஊராகிய **கில்-பிரீடியாவை** அடைந்தான், காத்தான்.

அங்கே இடுகாட்டில் புதுக் குழி ஒன்று தயாராகவே யிருந்தது. அதனுள்ளே ஒரு சவப்பெட்டியும் இருந்தது. காத்தான் அப்பெட்டியின் மூடியைக் கையிலே எடுத்தான். பெட்டி காலியாகக் காணப்பட்டது. அந்தக் கணத்திலேயே அவன் முதுகிலிருந்த பிணம் துள்ளியெழுந்து அப் பெட்டிக்குள் விழுந்தது. உடனே அவன் பெட்டியை மூடிக் குழியில் மண்ணைக் கொட்டி நிரப்பிவிட்டு வெளி யேறினான்.

அப்பொழுது கீழ்வானத்திலே சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். காத்தான் சாலைக்குச் சென்று அருகில் ஏதாவது வீடு தெரிகிறதா என்று பார்த்தான். கடைசியாக ஒரு சத்திரத்தைக் கண்டுபிடித்து, அதனுள்ளே சென்று, நீட்டி நிமிர்ந்து படுத்துவிட்டான். இரவுவரை ஒரே தூக்கந்தான். இரவில் விழித்ததும், சிறிது உணவெடுத்துக் கொண்டு, மீண்டும் துயில் கொண்டுவிட்டான். மறுநாள் காலையில் எழுந்தவுடன், ஒரு குதிரையை வாடகைக்கு வாங்கிக்கொண்டு, அவன் அதில் ஏறி வீட்டுக்குத் திரும்பிச் சென்றான். அவன் பிரயாணம் செய்த தூரம் இருபத்தாறு மைல். ஒரு நாளைக்கு முன்னால் இந்த இருபத்தாறு மைல் தூரமும் அவன் முதுகிலே பிணத்தைத் தாங்கிக்கொண்டு எட்டு மணி நேரத்தில் நடந்திருப்பதை அப்பொழுதுதான் அவன் உணர்ந்தான்.

வீட்டிலே அவன் மற்றவர்களிடம் எதுவும் சொல்ல வில்லை; தன் தந்தையிடத்தில் மட்டும் நடந்ததைத் தெரிவித்தான்.

அன்று முதல் அவன் திருந்திவிட்டான், புதிய மனிதனாக மாறிவிட்டான். கள், சீட்டு, சூது முதலியவற்றின் பக்கமே அவன் தலைவைத்துப் படுப்பதில்லை. இரவில் நேரம் கழித்து அவன் வெளியே செல்வதுமில்லை.

இரண்டு வாரங்களுக்குப் பின்பு, அவன் முன்பு காதலித்திருந்த மேரியைக் கடிமணம் புரிந்துகொண்டான். அவன் அடைந்த ஆனந்தத்தைப் போல் நாம் எல்லோரும் அடைவோமாக!

# 7. பன்னிரண்டு காட்டு வாத்துகள்

முன்னொரு காலத்தில் ஒரு வேந்தனும் இராணியும் இன்பமாக வாழ்ந்து வந்தனர். அவர்களுக்குப் பன்னிரண்டு பிள்ளைகள் இருந்தனர். ஆனால் ஒரு பெண்கூடப் பிறக்கவில்லை. நாம் எப்பொழுதும் இல்லாதவைகளுக்காக ஏங்குவோம். இருப்பவைகளைக்கொண்டு திருப்தி அடைய மாட்டோம், அல்லவா? இது போலவேதான் இராணியும் பெண்ணில்லாக் குறையை எண்ணி வருந்திக்கொண்டிருந்தாள். ஒருநாள் அவள், சாளரத்தின் வழியாக வெளியேயிருந்த மைதானத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அங்கே பனி, துய்ய வெண்மையான கட்டியாக உறைந்திருந்தது. செக்கச் செவேலென்று சிவந்திருந்த ரோஜா மலர்ச்செடியருகில் ஒரு காகம் அமர்ந்திருந்தது. இவைகளை எல்லாம் கண்ட இராணிக்கு ஓர் எண்ணம் உதித்தது. 'எனக்கு ஒரு மகள் இல்லையே ! இந்தப் பனிக்கட்டி போன்ற வெண்மையான உடலும், ரோஜாவைப் போன்ற சிவந்த கன்னங்களும், இந்தக் காகத்தைப் போன்ற கரிய கூந்தலுமுள்ள ஒரு பெண் எனக்குப் பிறந்தால் போதும், என் பன்னிரண்டு பிள்ளைகளையும் அவளுக்கு ஈடாகக் கொடுத்துவிடத் தயாராயிருப்பேன் !' என்று அவள் சொல்லிக்கொண்டாள்.

அவள் இவ்வாறு சொன்னவுடனேயே, திடீரென்று அவள் உடல் நடுங்கிற்று; பயத்தால் அவள் நிலைகுலைந்து நின்றாள். ஒரு கண நேரம் கழியுமுன், கடுமையான தோற்றத்துடன் கூடிய ஒரு கிழவி அங்கே அவள் முன்பு வந்து நின்றாள். "தவறான ஆசையினால் நீ இவ்வாறு விரும்பிவிட்டாய். உன்னைத் தண்டிப்பதற்காக உன் விருப்பம் நிறைவேறும்படி செய்கிறேன். நீ எண்ணியபடியே உனக்கு ஒரு மகள் பிறப்பாள். ஆனால், அவள் பிறந்த அன்றே நீ உன் மற்றைக் குழந்தைகளை இழந்துவிடுவாய் !" என்று சொல்லிவிட்டு, அவள் உடனே மறைந்து போய்விட்டாள்.

அந்தப்படியேதான் பின்னால் நடந்தது. இராணி தன் பேறுகாலத்தின்போது, தன் குழந்தைகள் அனைவரையும் ஒரு பெரிய அறையில் இருக்கும்படி செய்து, அறையைச்

சுற்றிக் காவலுக்காக ஆள்களையும் நிறுத்தி வைத்திருந்தாள். ஆனால், அவளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தவுடனே, அந்தக் கணத்திலேயே, மற்றைக் குழந்தைகள் இருந்த அறைக்குள்ளே சிறகுகளைத் தட்டும் ஓசையும், பறவைகள் 'கூ,கூ,கூ' என்று கூவும் ஒலியும் கேட்டன. சிறிது நேரத்திலே பன்னிரண்டு இளவரசர்களும் வாத்துகளாக மாறி, திறந்திருந்த சாளரங்களின் வழியாக வெளியே பறந்து சென்றுவிட்டார்கள். அருகிலேயிருந்த வனத்தை நோக்கி அவர்கள் பறந்து சென்றது, பல அம்புகள் ஆகாயத்தில் வேகமாகப் பாய்வன போலிருந்தது. இதை அறிந்த வேந்தன் தன் மைந்தர்களை இழந்ததற்காக மிகவும் வருந்தினான். இதற்கு மூல காரணம் இராணிதான் என்பது தெரிந்திருந்தால் அவன் கோபத்தால் கொதித்திருப்பான்.

புதிதாய்ப் பிறந்திருந்த இளவரசியை எல்லோரும் பனி ரோஜா என்று அழைத்து வந்தனர். பனிக்கட்டி போலவும், ரோஜா இதழ்கள் போலவும், அவள் உடல் வெண்மையும் சிவப்பும் கலந்திருந்ததால் அந்தப் பெயரே அவளுக்குப் பொருத்தமென்று அவர்கள் கருதினர். எல்லோரும் அவளிடத்தில் அன்பும் ஆதரவும் காட்டி வந்தனர். அவளுக்குப் பன்னிரண்டு வயதாயிற்று. கூட விளையாடு வதற்கு ஒரு குழந்தைகூட இல்லாமலிருந்ததால், அவள் தன் தனிமைக்காக வருந்தினாள்; தன் சகோதரர்களைப்பற்றி எண்ணினாள்; அவர்கள் இறந்து போய்விட்டதாகவே அவள் இவ்வளவு காலமும் கருதியிருந்தாள். அதன் உண்மையென்ன என்பதை அன்னையிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வத்துடன், அவள் இராணியிடம் சென்று கேட்டாள். அவளுடைய கேள்வி களை இராணியால் தாங்க முடியவில்லை. அவளும் தன் உள்ளத்தில் இத்தனை ஆண்டுகளாக உறுத்திக்கொண் டிருந்த இரகசியத்தை இளவரசியிடம் சொல்ல வேண்டு மென்று சமயத்தை எதிர்பார்த்திருந்ததால், முந்தைய வரலாற்றை விளக்கமாகச் சொல்லிவிட்டாள். அவ்வளவு தான், இளவரசி உடனே ஒரு முடிவு செய்துகொண்டு, அன்னையிடம் அதை அறிவித்தாள் : "என் பொருட்டாக என் அருமைச் சகோதரர்கள் காட்டு வாத்துகளாக மாறியுள்ளனர். என்னால் அவர்கள் எத்தனையோ இடர்களை அனுபவித்து வருகின்றனர்; இனி ஒருநாளைக் கூட வீணாக்காமல் நான் அவர்களைத் தேடிப் போகிறேன்.

எப்படியும் அவர்களைக் கண்டு மீண்டும் பழைய உருவங்களை அடையச் செய்கிறேன்!"

அரசனும் அரசியும் அவளைச் சுற்றி மிகுந்த கட்டும் காவலும் அமைத்திருந்தும் ஒன்றும் பயன்படவில்லை. மறுநாள் இரவு அவள் அரண்மனையிலிருந்து வெளியேறிப் பக்கத்திலிருந்த வனத்திலே சுற்றி அலைந்துகொண்டிருந்தாள். அன்றிரவுமுதல் மறுநாள் மாலைவரை அவள் நிற்காமல் நடந்துகொண்டேயிருந்தாள். அவள், கையிலே சில பணியாரங்கள் கொண்டுவந்திருந்தாள். காட்டிலே கிடைத்த சில காய்களையும் கொட்டைகளையும் பறித்து வைத்துக்கொண்டாள். இவைகளே அவளுக்கு உணவாயின. அந்திமாலையில் அவள் ஓர் அழகான மரக்குடிசையைக் கண்டாள். அதைச் சுற்றி நேர்த்தியான பூந்தோட்டம் ஒன்றிருந்தது. அதிலே கொத்துக் கொத்தாகச் சில மலர்கள் நறுமணம் வீசிக்கொண்டிருந்தன. சுற்றிலும் ஒரு வேலியும், வேலிக்கு ஒரு திட்டிக்கதவும் இருந்தன. அந்தக் கதவைத் திறந்துகொண்டு, அவள் உள்ளே சென்று வீட்டினுள் எட்டிப் பார்த்தாள். அங்கே ஒரு மேசையின்மேல் பன்னிரண்டு தட்டுகளும், பன்னிரண்டு கரண்டிகளும், உணவுப் பொருள்களும் இருப்பதை அவள் கண்டாள். பக்கத்திலிருந்த ஒரு பலகணி வழியாக அவள் கவனிக்கையில் மற்றொரு பெரிய அறையில் பன்னிரண்டு கட்டில்களும் காணப்பெற்றன. அவள் சுற்றிலும் பார்த்துக்கொண்டிருக்கும் போதே, திட்டிக் கதவு திறக்கப்படும் ஓசையும், காலடி ஓசைகளும் கேட்டன. பன்னிரண்டு இளைஞர்கள் உள்ளே வந்தனர். அவர்கள் அவளைக் கண்டதும் அவர்களுள் ஒவ்வொருவர் முகத்திலும் சோகமும் வியப்பும் காணப்பட்டன. அவர்களுள் மூத்தவன், "இளஞ்செல்வி! இங்கே நீ வரும்படியான துரதிர்ஷ்டம் என்ன நேர்ந்தது உனக்கு?" என்று வினவினான். "ஒரு பெண்ணுக்காக நாங்கள் எங்கள் தந்தையின் அரண்மனையை விட்டு வெளிவந்தோம். அதுமுதல் பகல் முழுதும் நாங்கள் வாத்துகளாகத் திரிந்து வருகிறோம். இது நடந்து பன்னிரண்டு ஆண்டுகளாகிவிட்டன. ஆனால் ஆரம்பத்திலேயே நாங்கள் ஒரு சபதம் செய்துகொண்டிருக்கிறோம்; எங்கள் கையிலே முதலில் சிக்குகிற பெண்ணைப் பலி வாங்கிவிடவேண்டும் என்பதே அந்தச் சபதம். ஒரு பாவமும் அறியாத, கள்ளம் கபடமற்ற, அழகியான உன்னை உலகில் வாழவிடாமற்

செய்ய வேண்டியிருப்பது பரிதாபந்தான்; ஆனால், நாங்கள் எங்கள் சபதத்தை நிறைவேற்றித் தீரவேண்டும்!" என்றும் அவன் சொன்னான்.

"நான் உங்களுடைய ஒரே சகோதரி. இவற்றைப்பற்றி யெல்லாம் நேற்றுவரை எனக்கு எதுவும் தெரியாது; தெரிந்தவுடன் நேற்றே நான் உங்களைத் தேடி வெளிக் கிளம்பிவிட்டேன்; உங்களுக்கு என்னாலான உதவியைச் செய்யவே நான் வந்துள்ளேன்!"

இதைக் கேட்டு அவர்களுள் ஒவ்வொருவனும், கைகளைப் பிசைந்துகொண்டு, துக்கத்தோடு தலைகவிழ்ந்து தரையைப் பார்த்துக்கொண்டே நின்றான். அப்பொழுது பூமியில் ஓர் ஊசி விழுந்தாலும் ஓசை கேட்கும், அவ்வளவு அமைதி நிலவியிருந்தது. சிறிது நேரத்திற்குப் பின் மூத்தவன், "எங்கள் சபதத்தைத்தான் சபிக்க வேண்டி யிருக்கிறது! இப்பொழுது என்ன செய்யலாம்?" என்று கூறினான்.

"என்ன செய்யலாம் என்பதை நான் சொல்கிறேன்!" என்று அங்கே திடீரென்று தோன்றிய கிழவி ஒருத்தி பேசத் தொடங்கினாள்: "உங்களுடைய தீய சபதத்தை உடைத்தெறியுங்கள்! யாராவது அவளிடம் கை நீட்டினால், உங்களைக் கோரைப் புற்களாக நான் மாற்றிவிடுவேன்! நான் உங்களுக்கும் அவளுக்கும் ஒருங்கே நன்மையை நாடுகிறவள். அவள் மூலந்தான் உங்களுக்கு விமோசனம் பிறக்கவேண்டும். இந்த வனத்திற்கு வெளியேயுள்ள சதுப்பு நிலத்தில் படர்ந்துள்ள பாசியிலிருந்து நூல் நூற்று, அந்த நூலால் உங்களுக்காகப் பன்னிரண்டு சட்டைகள் பின்னி முடிக்க வேண்டும்; இந்த வேலைகள் அனைத்தையும் அவளே தன் கைகளால் செய்யவேண்டும். பின்னி முடிக்க ஐந்தாண்டுகள் ஆகும்; அந்தக் காலம் முழுதும் அவள் ஒருமுறைகூட வாய் திறந்து பேசக்கூடாது, சிரிக்கக்கூடாது, அழவும் கூடாது. இவற்றுள் ஒன்றில் ஒருமுறை அவள் தவறிப்போனாலும் நீங்கள் உங்கள் ஆயுள் முடியும்வரை பகல் முழுதும் வாத்துகளாகவே இருக்கவேண்டியதுதான்! ஆகையால், உங்களுடைய சகோதரியைக் காத்துக்கொள் ளுங்கள். அவளால்தான் உங்களுக்குக் கதிமோட்சம் கிடைக்கும்!" இதைக் கூறியபின் கிழவி அங்கே காணப்பட வில்லை. உடனே இளவரசர்களிடையே பெரும் போட்டி ஏற்பட்டுவிட்டது. தங்களுடைய அன்புத் தங்கையை யார்

முதலிலே முத்தமிட்டு வாழ்த்துவது என்பதே அப் போட்டிக்குக் காரணம்.

மூன்று ஆண்டுகளாக இளவரசி பாசியெடுத்து வந்து, நூல் நூற்று, அந்நூலைச் சட்டைகளாகப் பின்னுவதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தாள். மூன்று ஆண்டுகளில் அவள் எட்டுச் சட்டைகள் தயாரித்துவிட்டாள். அந்தக் காலம் முழுதும் அவள் ஒருமுறைகூடப் பேசியதில்லை, சிரித்ததில்லை, அழுததுமில்லை. எதை அடக்கிக்கொண்டாலும் அழுகையை அடக்கிக்கொள்வதுதான் அவளுக்கு மிகவும் கடினமாயிருந்தது.

ஒருநாள் அவள் தோட்டத்தில் அமர்ந்து நூல் நூற்றுக்கொண்டிருக்கையில், எங்கிருந்தோ ஒரு வேட்டைநாய் அங்கு ஓடிவந்து, அவளுடைய தோள்களில் கால்களை வைத்துக்கொண்டு, அவள் நெற்றியையும் தலையையும் நாவினால் நக்கிற்று. அடுத்த நிமிடம் எழில்மிகுந்த இளைஞனான ஓர் அரசன், குதிரைமீது அமர்ந்துகொண்டு தோட்டத்தருகில் வந்து, திட்டி வாசல்பக்கம் நின்றுகொண்டு, தன் தொப்பியைக் கழற்றிக் கையில் வைத்துக்கொண்டு, உள்ளே வரலாமா என்று அனுமதி கேட்டான். இளவரசி தலையை அசைக்கவும், அவன் உள்ளே நுழைந்தான். அங்கே அவன் வந்ததற்காகப் பன்முறை மன்னிப்புகள் கோரினான், அவளிடம் பல கேள்விகளும் கேட்டான். ஆனால், அவள் பேசாமடந்தையாகவே இருந்துவிட்டாள். அவளைக் கண்டது முதலே அவன் அவளிடம் காதல் கொண்டுவிட்டான். தான் பக்கத்திலிருந்த இராஜ்ஜியத்தின் அரசனென்றும், அவளை மணக்க விரும்புவதாகவும், அவள் தன்னுடன் வந்து தன் இராணியாய் இருக்க வேண்டுமென்றும் அவன் கூறினான். அவளுக்கும் அவனிடம் காதல் நிறைந்திருந்தது. ஆனால், அவளுடைய சகோதரர்களை எப்படி விட்டுச்செல்வதென்று அவள் கலங்கினாள். பல முறை இயலாதென்று காட்டத் தலையை ஆட்டினாள். ஆனால், இறுதியில் அவள் இசைவு காட்டித் தன் அன்புக்கரத்தால் அவன் கரத்தைப் பற்றிக் கொண்டாள். அவளுடைய சகோதரர்களும், அவர்களைக் காத்துவந்த வனதேவதையும் எப்படியும் தான் இருக்கும் இடத்தைக் கண்டுகொள்வார்களென்று அவள் நம்பினாள். அவள் புறப்படுவதற்கு முன்னால் அவள் சேர்த்து வைத்திருந்த பாசியை ஒரு சட்டையிலும், எட்டுச்சட்டை

களை ஒரு கூடையிலும் எடுத்து வைத்தாள். அரசனின் வேலையாள்கள் அவைகளுக்குப் பொறுப்பாக நியமிக்கப் பெற்றனர். அவள் குதிரைமீது ஏறி அரசனுக்கு முன்புறம் அமர்ந்துகொண்டாள்.

போகும் வழியிலெல்லாம் அரசனுக்கு ஒரு கவலைமட்டும் அடிக்கடி தோன்றிக்கொண்டிருந்தது. அரண்மனையிலிருந்த அவனுடைய மாற்றாந்தாய் அவன் ஒரு பெண்ணை அழைத்துச் செல்வதை ஏற்றுக் கொள்வாளா என்பதுதான் அந்தக் கவலைக்குக் காரணம். ஆயினும், அங்கு அவனே எல்லா அதிகாரங்களையும் பெற்றிருந்ததால் அரண்மனையை அடைந்ததும், திருமணத் திற்கு ஏற்பாடுகள் செய்தான். பிஷப்பு வரவழைக்கப் பெற்றார். இளவரசிக்குப் புத்தாடைகளும் அணியிழைகளும் தயாரிக்கப்பெற்றன. விவாகம் விமரிசையாக நடந்தேறியது; மணமகள் வாய்மொழியாகச் சொல்ல வேண்டியவை களைச் சாடைகள்மூலம் தெரிவித்துக்கொண்டாள். அவள் உயர்ந்த குலத்தைச் சேர்ந்தவள் என்பதை அரசன் அவளுடைய நடை, உடை, பாவனைகளிலிருந்து எளிதில் தெரிந்துகொண்டான். அவ்விருவரையும் போல ஒத்த மனமும் அன்பும் கொண்டிருந்தவர்களைக் காண்பதரிது.

இளவரசி வந்ததுமுதல், தீய சிந்தை கொண்ட மாற்றாந்தாய் கேடு விளைக்க வாய்ப்புகளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். இளவரசி வனத்திலே எவனோ ஒரு வேடனின் மகளென்று அவள் கதை கட்டிவிட்டாள். ஆனால், அரசன் ஏமாறவில்லை. நாளடைவில் இளவரசி கருவுற்று, அழகிய ஓர் ஆண்மகவைப் பெற்றெடுத்தாள். அக்குழந்தை பிறந்ததிலிருந்து அரசன் எல்லையற்ற ஆனந்தமடைந்தான். அக்குழந்தையைத் தொட்டிலி லிட்டதும், அதற்குப் பெயர் சூட்டியதும் போன்ற வைபவங்களெல்லாம் மாற்றாந்தாய்க்கு வயிற்றெரிச்சலை அதிகமாக்கிவிட்டன. அவள் பாலில் ஒருவகை மதுவை ஊற்றி, இளவரசிக்குக் கொடுத்து அவளை நன்றாகத் தூங்க வைத்தாள். குழந்தையை எப்படித் தொலைக்கலாமென்று அவள் பல வகையாக நினைத்து நினைத்துப் பார்த்தாள். அந்த நேரத்தில், வெளியிலே தோட்டத்தில் ஓர் ஓநாய் கடைவாயை நக்கிக்கொண்டு, அவளையே பார்த்தவண்ணம் நின்றுகொண்டிருப்பதை அவள் கண்டாள். அப்பொழுது இளவரசி தன் செல்லக் கருவூலமான குழந்தையைக்

கையால் அணைத்துக்கொண்டிருந்தாள். அவள் கையை எடுத்துத் தள்ளிவிட்டு, மாற்றாந்தாய் வேகமாகக் குழந்தையைத் தூக்கி வெளியே எறிந்துவிட்டாள். குழந்தை கீழே விழுமுன்னே வெளியே காத்திருந்த ஓநாய் அப்படியே அதை வாயினால் கௌவிக்கொண்டு, ஒரு நொடியில் தோட்டத்தின் வேலியைத் தாண்டி வெளியே ஓடிவிட்டது. கொடுமனம் படைத்த மாற்றாந்தாய், தன் விரல்களை ஊசியால் குத்தி உதிரமெடுத்து, அதை உறங்கிக்கொண் டிருந்த இளவரசியின் வாயைச் சுற்றித் தடவி வைத்தாள்.

அரசன் அப்பொழுதுதான் வேட்டையிலிருந்து திரும்பி அரண்மனைக்குள் வந்துகொண்டிருந்தான். அவனை அவள் அழைத்து, நீலிக் கண்ணீர் வடித்து, அழுதுகொண்டே கைகளைப் பிசைந்து நின்றாள். நேராக அவனை இளவரசியின் படுக்கையறைக்கு அழைத்துச் சென்றாள்.

அங்கே இளவரசியின் அவனுடைய பட்டத்து இராணியின் வாயில் உதிரத்தைக் கண்டான். அவள் பக்கத்தில் குழந்தையையும் காணவில்லை! பழிபாவத்திற்கு அஞ்சாத பழைய இராணியின் பேய்த் தன்மையைச் சொல்வதா, அரசனும் இளவரசியும் அடைந்த துக்கத்தை யும் நடுக்கத்தையும் குழப்பத்தையும் சொல்வதா, அல்லது தன் இராணியைப்பற்றி அரசன் அடைந்த வெறுப்பையும் இழிவான எண்ணத்தையும் சொல்வதா, அல்லது இளவரசி நெஞ்சிலே தேங்கி நின்ற சோகத்தை அழுது வெளி யிடவோ, வாய் திறந்து பேசவோ வழியின்றித் துடித்ததைச் சொல்வதா? எதைச் சொல்வதானாலும் மணிக்கணக்காக ஆகும். அரசன் ஒரு யுக்தி செய்தான். அன்னையிடம் இந்த விஷயம் வெளியில் யாருக்கும் தெரியக்கூடாதென்றும், இராணி குழந்தையைச் சாளரத்தின் பக்கம் வைத்துக் கொண்டிருக்கையில் குழந்தை தவறி வெளியே விழுந்து விட்டதென்றும், அதை ஏதோ வனவிலங்கு தூக்கிச் சென்று விட்டதென்றும், அவள் வெளியே தெரிவிக்க வேண்டு மென்றும் அவன் கண்டிப்பாகச் சொல்லிவைத்தான். அவளும் அப்படியே செய்துவருவதாகச் சொல்லிவிட்டு, பின்னர்த் தானும் அரசனும் படுக்கையறையிலே கண்ட காட்சியையே இரகசியமாக வெளியிட்டுவந்தாள்.

நாடு முழுவதிலும் எந்த இராஜ்ஜியத்திலும் இளவரசியைப் போலத் துக்கமடைந்தவர் எவருமிலர்.

குழந்தையைப் பறிகொடுத்த சோகம். கணவனின் பழிப்பினால் ஏற்பட்ட வேதனை - இரண்டும் சேர்ந்து அவளுடைய நெஞ்சே வெடித்துவிடும் போலாகிவிட்டது. அந்த நிலையிலும் அவள் வாயைத் திறக்கவில்லை, அழவுமில்லை; சதுப்பு நிலப் பாசியை நூற்பதையும், சட்டைகள் பின்னுவதையும் நிறுத்தவுமில்லை. அடிக்கடி பன்னிரண்டு வாத்துகளும் அரண்மனைத் தோட்டத்தி லுள்ள மரங்களிலே வந்து அமர்ந்துகொண்டும், மெல்லிய மணலில் நின்றுகொண்டும் அவளுடைய அறையின் சாளரங்களைக் கவனித்துக்கொண்டிருப்பது வழக்கமா யிருந்தது. ஆதலால், அவள் விரைவிலே பின்னல் வேலையை முடித்து, எல்லாச் சட்டைகளையும் தயாரித்து வைத்துக்கொள்ள வேண்டும் என்பதிலேயே கருத்தா யிருந்தாள். மற்றோர் ஆண்டும் முடிந்துவிட்டது. அப் பொழுது பன்னிரண்டாவது சட்டையும் முடிவடைவதற்கு ஒரு கை மட்டும் பின்ன வேண்டியிருந்தது. அந்நிலையில் அவளுக்குப் பேறுகாலம் நெருங்கிற்று. இரண்டாவது குழந்தையாகத் தங்கச்சிலை போன்ற ஒரு பெண்ணை அவள் பெற்றெடுத்தாள்.

இந்தத் தடவை அரசன் மிகவும் எச்சரிக்கையாய் இருந்தான். இளவரசியையும் குழந்தையையும் ஒரு கண நேரங்கூடப் பிரியாமல் நின்று கவனித்துக் காவல் செய்வதற்கு அவன் தக்க ஏற்பாடு செய்தான். ஆனால், இருண்ட மனம் கொண்ட பழைய இராணி, அவனுடைய காவலையும் தகர்த்து, தன் துரோகத்தைச் செய்ய முன் வந்தாள். காவலர் சிலருக்கு இலஞ்சம் கொடுத்து, மற்றைக் காவலர்களை உறங்கச்செய்து, இளவரசிக்கும் முன்போல் மது கலந்த பாலைக் கொடுத்துக் கிறங்க வைத்துவிட்டாள். குழந்தையைத் தூக்கிச் சென்று கொன்றுவிடும்படி அவள் ஒரு காவலனையே ஏற்பாடு செய்தாள். அவன் தூக்கி வெளியே கொண்டுவருகையில், அவள் தோட்டத்தில் எட்டிப் பார்த்தாள். அங்கே முன்னால் வந்த ஓநாயே வந்து நின்று, கடைவாயை நக்கிக்கொண்டு, அவளை ஏறிட்டுப் பார்த்தது. வேலை எளிதாகிவிட்டதென்று, அவள் குழந்தையைக் காவலனிடமிருந்து வாங்கி, ஓநாயிடம் வீசி விட்டாள். முன்போலவே ஓநாய் குழந்தையைக் கௌவிக் கொண்டு ஓடிவிட்டது. பின்னர் அவள் தன் விரல்களில் ஊசியால் குத்தி, வடிந்த உதிரத்தை இளவரசியின் வாயைச்

சுற்றித் தடவிவிட்டு, வெளியே வந்து ஊளையிட்டும் கத்தியும் அலறியும் அரசனையும் அரண்மனையிலிருந்த பலரையும் வரச்செய்து, இளவரசியின் அறை முழுதும் ஆள்கள் கூடி நிற்கும்படி செய்துவிட்டாள். எல்லோரும், இளவரசியே தன் குழந்தையை அப்பொழுதுதான் விழுங்கியிருப்பாளென்று உறுதியாக எண்ணினார்கள்.

ஏழை இளவரசி என்ன செய்வாள்! இனித் தன் உயிர் தரித்திராது என்று அவள் கருதினாள். எதையும் சிந்தித்துப் பார்க்கும் ஆற்றலைக்கூட அவள் மனம் இழந்துவிட்டது. அவளுக்கு ஆண்டவனைக்கூடத் தொழத் தோன்றவில்லை. அடித்துவைத்த கற்சிலை போல், அவள் இருந்த இடத்திலிருந்து பெயராமல், பன்னிரண்டாவது சட்டையில் எஞ்சியிருந்த ஒரு கையைப் பின்னிக்கொண்டிருந்தாள்.

அரசன், அவளை வனத்திலே, தான் முன்பு கண்ட வீட்டுக்கே அழைத்துச் சென்று, அங்கே விட்டுவர எண்ணினான். ஆனால், அவனுடைய மாற்றாந்தாயும் மந்திரிகளும் நீதிபதிகளும் அதற்கு ஒப்பவில்லை. அன்று பகல் மூன்று மணிக்கு அவளை ஒரு மரக்கட்டையிலே கட்டித் தீ வைத்துக் கொன்றுவிடவேண்டுமென்று அவர்கள் முடிவு கூறிவிட்டனர். அந்த நேரம் நெருங்கி வந்ததும், அரசன் அரண்மனையின் ஒரு மூலையிலே போய் ஒதுங்கியிருந்துவிட்டான். அந்த நேரத்தில் அவன் அடைந்த வேதனையைப் போல் அவனுடைய இராஜ்ஜியத்திலே எவரும் அடைந்திருக்கமாட்டார்கள்.

கொலையாளிகள் வந்து இளவரசியை அழைத்துச் செல்லும் பொழுது, அவள் தான் வைத்திருந்த சட்டைகளையெல்லாம் கைகளிலே எடுத்துக்கொண்டு சென்றாள். கடைசிச் சட்டையில் இன்னும் சில பின்னல்கள் மட்டும் போடவேண்டியிருந்தன. மரக்கட்டையில் அவளைக் கட்டிய நேரத்திலும் அவளுடைய கரங்கள் பின்னல் வேலையை நிறுத்தாமல் வேகமாகச் செய்துகொண்டேயிருந்தன. கடைசிப் பின்னலையும் அவள் போட்டு முடித்தவுடன், அவள் கண்களிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் அந்தச் சட்டையின்மீது விழுந்தது. ஒரு கண நேரத்திற்குப்பின் அவள் துள்ளியெழுந்து, "நான் நிரபராதி! என் கணவரை இங்கே அழையுங்கள்!" என்று வாய் திறந்து கூவினாள். கொலையாளிகள் தங்கள் வேலையை நிறுத்திக் கொண்டனர். ஆனால், அவர்களுள் தீயோன் ஒருவன்,

அவள் நின்றுகொண்டிருந்த கட்டைகளின் ஒரு மூலையிலே தீயைப் பற்றவைத்துவிட்டான். சுற்றியிருந்தவர்கள் அனைவரும் திடுக்கிட்டு நின்றனர். கண் மூடித் திறப்பதற்குள் எங்கிருந்தோ பன்னிரண்டு காட்டுவாத்துகள் அங்கே பறந்து வந்து, கட்டைகளைச் சுற்றி நின்றுகொண்டன. உடனே இளவரசி, கையிலிருந்த பன்னிரண்டு சட்டைகளையும் ஒவ்வொரு வாத்தின்மீது ஒன்றாக வீசியெறிந்தாள். மறு விநாடியில் வாத்துகள் நின்ற இடங்களில் பன்னிரண்டு வீர இளைஞர்கள் எழுந்து நின்றனர்! சிலர் மேலே ஏறிச் சென்று, தங்கள் சகோதரியின் உடல்மீது சுற்றியிருந்த கட்டுகளை அவிழ்த்தனர். அப்பொழுது அவர்களுள் மூத்தவன் ஒரு கட்டையைத் தூக்கி அவசரமாகத் தீ வைத்தவன் மண்டையிலே ஓங்கி அடித்தான். அந்தக் கொலையாளிக்கு இரண்டாவது அடியிலேயே சுரணையில்லாமற் போய்விட்டது. அவன் அப்படியே சுருண்டு விட்டான்.

சகோதரர்கள் இளைய இராணியைத் தேற்றிக் கொண்டிருக்கையில், அரசனும் அங்கே விரைந்து வந்து கொண்டிருந்தான். அப்பொழுது அழகிய உருவத்தோடு ஒரு மாதரசியும் அங்கே வந்தாள்; அவள் ஒரு கையில் ஒரு குழந்தையை வைத்துக்கொண்டு, மற்றொரு கையில் அந்த நாட்டின் இளவரசனைப் பிடித்து அழைத்துக்கொண்டு வந்தாள். ஆனந்தத்தால் எல்லோரும் கண்ணீர் பெருக்கினர்; களித்துச் சிரித்தனர்; ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு முத்தமிட்டனர். ஓநாயாக வந்து இரண்டு குழந்தைகளையும் கௌவிக்கொண்டு போய் அவைகளைக் காப்பாற்றி வைத்திருந்து, திரும்பக் கொண்டுவந்து சேர்த்த வன தேவதைக்கு நன்றி சொல்லக்கூட நேரமில்லை; அந்த மாதரசி ஒரு நொடியில் மாயமாய் மறைந்துவிட்டாள். அன்று அரண்மனையே இன்ப வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தது எனலாம். இதுவரை உலகிலே தோன்றிய எந்த அரண்மனையிலும் அத்தகைய ஆனந்தத் தாண்டவத்தை யாரும் கண்டிருக்க முடியாது.

— — — —